
மோகன்ச்
சிரிப்பில்
மிதந்ததுண்டோ?
ஃபண்டா ஆரஞ்சு
சுவை இனிதே...
பருகிடவே
எடுக்காதோ தாகம்!
ஃபண்டா கோகா-கோலா
கம்பெனியின் தயாரிப்பு
CMCF-3-152-TAM

# இருமலா?

# பெப்ஸ்

## இருமல் மற்றும் தொண்டைப் புண்களுக்கு எதிராக விந்தைச் செயல் புரிகிறது

லாஸஞ்சைப் போல வாயில் அடக்குங்கள் பெப்ஸ். பாது காப்புடன் இதமளிக்கும் மூலிகைச் சத்துக்கள் விரை விலே வெளிப்படுகின்றன. இந்த அரிய சத்துக்கள் மூச்சுடன் கலந்து உங்கள் தொண்டையையும் சுவாச கோசத்தையும் நெகிழ்த்து கின்றன. இருமலோ, தொண்டைப் புண்ணோ அல்லது ஜலதோஷமோ உங்களைத் தொற்றும்போது பெப்ஸ் சக்தியுடன் இதமளிக்கிறது.




**பெப்ஸ்**

**50 ஆண்டுகளுக்கும் மேலாக நம்பகமான இருமல் நிவாரணி**

**சௌமிய, பங்குனி, 9 : 1970, மார்ச் 22**

# கல்கி

## பொருளடக்கம்





"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 20 | ரூ. 10 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 21 | ரூ. 10/50 |
| இதர நாடுகள் | ரூ. 40 | ரூ. 20 |



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 29 □ இதழ் 34



# மேற்கு வங்க நெருக்கடி

சென்ற வாரம் முழுதும் மேற்கு வங்காளத்தில் ராஜீய நிலைமை மிக மிக சீரெட்டாக இருந்து வந்திருக்கிறது. இடது கம்யூனிஸ்டுகளுடன் தொடர்ந்து கூட்டணியிலோ, மந்திரி சபையிலோ இருக்க முடியாது என்று முதல் அமைச்சரின் பங்காள காங்கிரஸ் கட்சி 'இறுதியாக' முடிவெடுத்தது. அதை அடுத்து அரசாங்க நடவடிக்கைகளே ஏறக்குறைய நின்று போய்விட்டன.

ஸ்ரீ அஜாய் முகர்ஜியின் விலகலையடுத்து, ஸ்ரீ ஜோதி பஸுவை மாற்று மந்திரி சபை அமைக்குமாறு கவர்னர் கலந்தாலோசிப்பது தவிர்க்க முடியாதது. ஆனால் அவரால் ஸ்திரமான மந்திரி சபை அமைக்க முடியும் என்ற நம்பிக்கை அவ்வளவாக இல்லை. எதிர்பாராத வகையில் கட்சிகள் ஒன்றுபட்டால் ஒழிய, ராஷ்டிரபதியின் ஆட்சி வந்தே தீரும் என்பதுதான் பலருடைய கருத்து. அத்தகைய ஆட்சி குறுகிய காலத்துக்குத்தான் இருக்க வேண்டும்; விரைவில் தேர்தல் நடந்தாக வேண்டும் என்று ஜோதி பஸு முன்கூட்டியே எச்சரித்து விட்டார். ஆனால் ராஷ்டிரபதி ஆட்சி வருமாயின் அதைக் குறுகிய காலத்துக்குக் கட்டுப்படுத்த முடியாது; அது சற்று நீண்ட காலம் அமுலில் இருந்தாக வேண்டும் என்றுதான் நிலைமையின் தேவைகளை நன்கு அறிந்தவர்கள் மதிப்பிடுகின்றனர்.

சென்ற பிப்ரவரியில் கூட்டணி மந்திரிசபை வங்கத்தில் பதவிக்கு வந்தது முதல், இடது கம்யூனிஸ்டுகள் தமது மந்திரி சபைப் பதவி அதிகாரத்தையும் செல்வாக்கையும் இடையறாது பயன்படுத்திக் கொண்டு, பெரிய அளவில் வளர்ச்சியடைந்து விட்டனர். பெரும்பாலான தொழிற் சங்கங்கள் அவர்கள் வசம் ஆகிவிட்டன. போலீஸாரிடை கூடத் தொழிற் சங்கங்களை அவர்கள் தோற்றுவித்துள்ளனர். படித்தும், படிக்காமலும் வேலையற்றிருப்போரில் ஏராளமானவர்கள் அவர்களது வலையில் விழுந்திருக்கிறார்கள். மூன்று லட்சம் ஏக்கரா நிலம் இடது கம்யூனிஸ்டுக் கட்சியின் ஆதரவுடன் அதைப் பின்பற்றுவோரால் கைப்பற்றப்பட்டுள்ளது. மகசூல்கள் கொள்ளையரால் அறுவடை செய்யப்படுகின்றன. கூட்டணிக் கட்சிகளிடை வளர்ந்துவரும் ஆதிக்கப் போட்டி காரணமாகக் கொலைகள், கொள்ளைகள், வழிப்பறிகள், குண்டு வீச்சுகள் போன்ற பெருங் குற்றங்கள் சகஜமாக நடைபெறுகின்றன. ஐந்து மாதங்களுக்கு முன்பே முதலமைச்சர் ஸ்ரீ அஜாய் முகர்ஜி இவற்றையெல்லாம் பொது மக்களின் கவனத்துக்குக் கொண்டு வரத் தொடங்கினார். 'சட்டமும் ஒழுங்கும் சீர்குலைந்து விட்டன, அராஜகம் நிலவுகிறது' என்று அவர் சொல்லி வந்தாரே தவிர, தமது முதல் மந்திரிப் பதவியை உடனடியாகத் துறக்க முன்வரவில்லை. வெளிப்படையாகத் தாம் செய்யும் பிரசாரத்தினால், இடது கம்யூனிஸ்டுகளின் உண்மையான தன்மையை மக்கள் சுலபமாகப் புரிந்து கொள்ள முடியும்; அதனால் அவர்களிடம் மக்களுக்கு வெறுப்பு ஏற்படும்; இதனால் இடது கம்யூனிஸ்டுகள் இல்லாத மந்திரி சபையை அமைப்பதற்கு வழி பிறக்கும் என்றெல்லாம் ஸ்ரீ அஜாய் முகர்ஜி நினைத்தார் போலும்! ஆனால் அதற்கு நேர்மாறாக ஜோதி பஸு தமது பிரசார யந்திரத்தை முடுக்கிவிட்டு, எல்லா உபாயங்களையும் கையாண்டு, அஜாய் முகர்ஜியே விலகிப் போகும்படியான ஒரு நிலைமையைத் தோற்றுவிப்பதில் வெற்றி கண்டுள்ளார். மத்திய சர்க்காரின் மனப்பான்மையும் சென்ற வாரம் வரை ஜோதி பஸுவின் போக்குக்கே அநுகூலமாக இருந்து வந்தது. என்ன செய்தாலும் நாயின் வாலை நிமிர்த்தமுடியாது என்பதைத் தெரிந்து கொள்ள அஜாய் முகர்ஜிக்கு இவ்வளவு நாளாயிற்று. இந்திய சர்க்காருக்கு இன்னும்கூடச் சற்று அதிக அவகாசம் தேவைப்படும் போல் இருக்கிறது!

மேற்கு வங்காளத்தில் இடது கம்யூனிஸ்டு ஆதிக்கம் உறுதியாகிவிட்டால் விரைவில் அது வடகிழக்கு இந்தியா

வில் நெடுகப் பரவி விடக்கூடும். ஏற்கனவே அங்கு சீன, பாகிஸ்தானிய ஆயுத சப்ளைகளும், விஷமங்களும் நடந்து வருகின்றன. கம்யூனிஸ்டு சீனவைப் பின்பற்றும் தீவிரக் கம்யூனிஸ்டுகள் மேற்கு வங்காளம் உட்பட ஆறு மாநிலங்களில் கறுகறுப்பாக இருந்து வருகின்றனர். பிளவுகளினுல் காங்கிரஸ் பலவீனப்பட்டு இருப்பதால் 1972 தேர்தலில் பிரதமரின் கட்சியைத் தம்மால் அறைகூவி அழைக்க முடியும் என்று இடதுசாரிகள் நம்புகின்றனர். தமது எதிர்கால நடவடிக்கைகளுக்கு மேற்கு வங்காளத்தை ஒரு தளமாகப் பயன்படுத்திக் கொள்வது தான் இடது கம்யூனிஸ்டுகளின் திட்டம். இதன் அபாயத்தை உரிய காலத்தில் உணர்ந்து, இந்திய சர்க்கார் உறுதியாக நடந்து கொள்ள வேண்டும் என்று தேச மக்கள் எதிர்பார்க்கின்றனர்.

# பட்டுத் தொழிலுக்கு ஊக்கம் தேவை

விவசாயத்துக்கு அடுத்தபடியாக நமது பாரதம் பேணி வளர்த்த தொழில் கைத்தறித் தொழில். காந்தியடிகளின் ஆதரவு பெற்ற தொழில் கைத்தறி. குறைந்தபட்சம் இன்னின்ன ரகங்களைக் கைத்தறிக்கே ஒதுக்க வேண்டும் என்று ராஜாஜி வற்புறுத்தி வருகிறார்.

பட்டு உற்பத்தியில் பாரதம் உலகில் நான்காவது இடத்தைப் பெற்றிருக்கிறது. பட்டுக் கைத்தறி நெசவிலோ முதலிடமே பெற்றிருக்கிறது. குறிப்பாகத் தமிழ்நாட்டு பட்டுச் சேலைகள் உலகப் புகழ் வாய்ந்தவை.

பட்டு நெசவு செய்யும் கைத்தறிகள் நம் தமிழ் நாட்டிலேயே 30,000க்கு அதிகமாக உள்ளன. பட்டின் விலையோ ஏகமாக உயர்ந்திருக்கிறது. காரணம், பட்டு உற்பத்தி தேவையைக் காட்டிலும் குறைவாக இருப்பது தான். ஜப்பானில் பட்டின் விலை கிலோவுக்கு ரூ. 145 என்றல் நம் நாட்டில் 234 ரூபாய். உலகச் சந்தையில் நம் நாட்டுப் பட்டின் விலை அதிகமாயிருப்பதால், ஏற்றுமதி விஷயத்தில் நாம் போட்டி போட்டுக் கொண்டு முன்னேற முடியவில்லை. சென்னை மாவட்டத்தில் ஹோசூர்ப் பகுதியில் முசுக்கட்டைச் சாகுபடியும் பட்டு உற்பத்தியும் சிறப்பாக நடைபெறுகின்றன. இன்னும் விரிவுபடுத்த இங்கு வாய்ப்பு உண்டு. இதே போலக் குன்னூர், தென்காசி, சேலம் மாவட்டத்திலுள்ள ஏர்க்காடு மலைப் பகுதி போன்ற இடங்களிலும் பட்டு உற்பத்தியைப் பெருக்கத் தீவிர முயற்சி எடுக்கலாம். உணவுப் பொருள் விஷயத்தில் பசுமைப் புரட்சி செய்யும் அரசாங்கம் பட்டுச் சாகுபடியிலும் ஒரு புரட்சியை மேற்கொண்டு இத்துறையில் ஈடுபட்டிருப்போருக்கு ஊக்கம் அளித்தால் ஐந்தாண்டு காலத்துக்குள் பட்டு உற்பத்தியில் தன்னிறைவு பெறப் பெரும் வாய்ப்பு இருக்கிறது.

அண்மையில் வெள்ளி விழாக் கொண்டாடிய பனாரஸ் மதுரை சுதேசிப் பட்டு ஜரிகை ஜவுளி வியாபாரிகள் சங்கம், பட்டு உற்பத்தி, கைத்தறி ஆகியவற்றில் முன்னேற்றம் காண வேண்டிப் பல வழி வகைகளை ஆராய்ந்தது. கலையம்சம் பொருந்திய பட்டுத் தொழில் உலக அரங்கில் பாரதத்துக்குப் பெருமை சேர்க்கும் தொழில்; அரசாங்கம் ஆக்கமும் ஊக்கமும் அளித்துப் போற்ற வேண்டிய தொழில். இப்பொறுப்பை உணர்ந்து அரசாங்கம் செயல்பட வேண்டும்.

# ராஜாஜியின் கருத்துக்கள்

ராணுவப் புரட்சி மூலம் ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கும், பார்லிமென்டின் தீர்மானப்படி ராணுவத்தைக் கொண்டு ஆட்சி புரிவதற்கும் இடையே மிகப் பெரிய வித்தியாசம் உண்டு. பார்லிமென்டின் தீர்மானப்படி அதன் அங்கீகாரத்துடன் ராணுவத்தைக் கொண்டு ஆட்சி புரிவதைத்தான் ஜெனரல் கரியப்பா அவர்கள் குறிப்பிட்டார். 'ஹிந்துஸ்தான் டைம்ஸி'ல் வெளியான அவரது அறிக்கையை நான் படித்ததிலிருந்து, அவர் இந்தியாவில் ராணுவப் புரட்சி ஏற்படுவதை அடியோடு புறக்கணித்தார் என்றே எனக்குப் புரிந்தது. தாம் எதனால் ராணுவப் புரட்சியை ஒப்பவில்லை என்பதற்கான காரணங்களையும் அவர் விளக்கியுள்ளார். பார்லிமென்டின் அங்கீகாரம் பெற்ற ராணுவ ஆட்சியை அவர் ஆதரித்துப் பேசியதில் ஆபத்தாக ஏதுமில்லை. இன்றைய இந்திய யூனியனின் நிலையைக் கண்டு பலர் இவ்விதம் சிந்தித்து வருகிறார்கள். முக்கியமாக, பல ராஜ்யங்களில் அரசியல் 'எஜமானர்'களின் நெருக்கலின் கீழ் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் பெருமளவுக்கு அரசியல் வாதத்துக்கு ஆட்படுத்தப்பட்டிருப்பதால் இவ்வித சிந்தனை எழுந்துள்ளது.

★

அரசியல் சாஸனம் தடை செய்திருக்கும் ஒன்றை 'சோஷலிஸம்' என்ற சொல்லின் மூலம் சட்ட சம்மதம் பெற்றதாக மாற்றிவிட முடியாது. இன்றைய உடைமையாளரிடமிருந்து ஆர்ஜிதம் செய்து பிறருக்கு நிலத்தைக் கொடுப்பதற்காக முறை மார்க்கெட் விலை கொடுத்துக்கூட நிலத்தை அரசாங்கம் எடுத்துக் கொள்ள முடியாது என்று சட்டப்படி தெளிவாகிறது. ஒரு பிரிவிடமிருந்து நிலத்தை எடுத்து இன்னொரு பிரிவுக்குத் தருவது, அரசியல் சாஸனம் குறிப்பிடும் 'பொதுநலனுக்கான பணி' ஆகாது. அது அடிப்படைச் சட்டத்தை மீறிய செயலே. விளைச்சலை விருத்தி செய்வதற்குத் தேவைப்




படுகிற முதல் போட முடியாத ஏழைகள் மீது நிலத்தைச் சுமத்துவது அவர்களுக்குத் துணை புரிவது ஆகாது. இந்தக் கஷ்டத்தைச் சமாளிக்க அவர்களுக்குக் கடன் கொடுப்பதன் மூலம் புதுப் பிரச்னைகள் எழும். சொற்ப வருவாயில் கடனைத் திருப்பிச் செலுத்த முடியாமல் அவர்கள் கடனாளிகள் ஆகிவிடுவார்கள்.

★

வெறும் கோஷங்களை எழுப்புவதை விட முறைப்படி சிந்தித்துப் பார்த்தால் எல்லோருக்கும் வேலை கிடைப்பதற்கு வழி காண முடியும். எல்லோருக்கும் வேலை காத்துக் கொண்டிருக்கிறது. நிலத்துக்குச் சொந்தக்காரர்களாக இருக்கும் பொறுப்பு இல்லாமலே விவசாயத்தில் போதிய வேலை வாய்ப்பு இருக்கிறது.

இது தவிரவும் வேறு பல இனங்களில் கவனம் செலுத்தினால் பெரிய இயந்திரங்கள் தேவைப்படும் பிரம்மாண்டத் திட்டங்கள் இன்றியே நாட்டின் க்ஷேமத்தைப் பெருக்கி ஏராளமான மக்களுக்கு வேலை வாய்ப்புத் தரமுடியும். மக்கள் வசிப்பதற்குரிய வீடுகளைப் பெருமளவில் கட்டக்கூடிய வாய்ப்பு நாட்டில் நிறைய இருக்கிறது. மாடுகள், கோழிகள் முதலியவற்றைக் கண்டபடி திரிய விடாமல் கூடவே அவற்றுக்கும் வசதி செய்து கவனித்துக் கொள்ளுமாறு இந்த 'ஜாகைத் திட்டத்தை' உருவாக்கலாம். வண்டிகள் போகக் கூடிய நல்ல சாலைகளை அமைத்துச் சுபிட்சமான தேசமாக நாட்டை இணைப்பதற்கு நிறைய இடம் உண்டு. கிராமங்களில் வசிக்கும் எல்லோருக்கும் சுத்தமான குடிநீர் வசதி செய்து கொடுப்பதற்குத் தேவைப்படும் வேலைக்கும் முடிவே இல்லை. வடிகால் வசதிகளைச் சீராக்கி ஊர்களை மனத்துக்கு இனிமையான, ஆரோக்கியமுள்ள இடங்களாக்க எவ்வளவோ வேலை தேவைப்படுகிறது. மக்களின் ஆடைகளையும் கால் நடைகளையும் துப்புரவாகவும், பார்ப்பதற்கு அழகாகவும் வைத்துக் கொள்வதற்கு வசதிகள் தேவை. இவற்றுக்கெல்லாம் எவ்வளவு உழைப்பு அவசியமாகிறது? இந்தத் திட்டங்கள் நாட்டில் எத்தனை எத்தனையோ பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கும். மேலும் வைத்திய வசதிகள், தாய்-சேய் நல விடுதிகள் ஆகியவற்றை அமைத்துக் கொடுக்கின்ற அத்தியாவசியப் பணியில் எவ்வளவோ பேர் ஈடுபட முடியும். இவற்றை யெல்லாம் செய்தால் எல்லோருக்கும் வேலை கிடைப்பதுடன் மகிழ்ச்சியும் கிட்டும். ஆண்டவன் அருளால் நாம் எல்லோரும் இதுபோன்ற இனங்களில் கவனம் செலுத்தி, அனைவரும் இன்புறச் செய்வோம். தவறுதலாகச் செல்லும் உலகைத் திருத்தும் வகையில் வழி காட்டியாக ஆவோம்.

★

உண்மையாகவே மக்களுக்கு நலன் பயக்கும் சர்க்கார் என்பது அனைவருக்கும் வேலை வாய்ப்புப் பெருகும் விதத்தில் திட்டங்களை அமைத்துத் தொழில் துறையை விரிவடையச்

செய்யும். ஆனால் மக்கள் நலனை ஏற்படுத்துவதாக வாயளவில் சொல்லிக் கொள்ளும் ஸ்ரீமதி இந்திரா காந்தியின் அரசாங்கம் அந்த லட்சியத்தை அடைய எதுவும் செய்யவில்லை. கழுதையின் வாய்க்கு முன்பு ஒரு முள்ளங்கியைக் காட்டிக் கொண்டே போனால் கழுதை அதைப் பிடிப்பதற்காக அந்த வழியிலேயே போய்க் கொண்டிருக்கும். இப்படியே இன்றைய சர்க்கார் ஆசை வார்த்தை காட்டி, தங்கள் மார்க்கத்தில் நாட்டை அழைத்துச் செல்கிறதே ஒழிய உண்மையான க்ஷேம லட்சியத்துக்குத் தேசத்தை நடத்திச் செல்லவில்லை. உண்மை நலனை அடைவது சிரமம். இதற்கான உபாயத்தைப் பொருளாதார அறிஞர்களே அறிவர்; அரசியல்வாதிகள் அறியமாட்டார்கள்.

'பழைய' காங்கிரஸும் கொள்கை அளவில் 'புது' காங்கிரஸிடமிருந்து மாறுபட்டிருக்கவில்லை. ஒரே கொள்கையாளரிடையே போட்டி நடப்பதில் சாரமில்லை. எனவே, மக்கள் சபையில் 'பழைய' காங்கிரஸ் செல்வாக்குப் பெற்றிருப்பதாகத் தெரியவில்லை என்று பத்திரிகைகள் கூறுவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. மக்களிடமும் பத்திரிகையாளரிடமும் 'பழைய' காங்கிரஸ் செல்வாக்குப் பெற வேண்டுமாயின் அது உண்மையை உள்ளபடி உணர்ந்து, அனைவருக்கும் வேலை வாய்ப்புக் கிடைத்து நாட்டு நலனை மெய்யாகவே உயர்த்தும் பொருளாதார அமைப்பில் தீரத்துடன் கவனம் செலுத்த வேண்டும்.

★

பரஸ்பரம் துவேஷிக்கும் இரண்டு துண்டுகளாகவோ, அல்லது பல துண்டுகளாகவோ இந்தியாவைப் பிளக்கக் கூடாது என நாம் விரும்பினோமாயின் ஆங்கிலத்தையே இந்தியாவின் ஆட்சி மொழியாக நீடிக்க வேண்டும். இது சட்டம், ஒழுங்குப்பாடு ஆகியவற்றுக்கு உதவுவதோடு, மக்கள் ஒருவரையொருவர் நல்ல விதத்தில் புரிந்து கொள்ளவும் வழி செய்யும். ஹிந்தியை ஆங்கிலத்துக்கு மாற்றாக ஆட்சி மொழியாக்குவதால் மக்களிடை தப்பபிப்பிராயம் ஏற்படும்; பாரபட்சங்கள் உண்டாகும். தேசத்தில் ஒற்றுமை உணர்வு ஏற்படுவதை இது தடை செய்யும்.

ஆங்கிலத்தை நம் ஆட்சி மொழியாக நீடிப்பது உலக நாடுகளின் ஐக்கியத்துக்கும் உதவும். இந்தியாவின் பல்வேறு பகுதிகளை ஒற்றுமைப்படுத்துவதோடு, உலக ஒற்றுமைக்கும் ஆங்கிலம் உதவும் என்பது ஒரு மகத்தான விஷயமாகும். இந்தப் பெரும் விஷயத்துக்குப் பணி புரிவோம். கயிற்றைப் பாம்பாகவும், பாம்பைக் கயிறாகவும் பார்த்து மயங்காதிருப்போம். ஆங்கிலம் விஷ சர்ப்பமல்ல; கயிறே.

★

நான் மிகவும் நன்றிக் கடன் கொண்டுள்ள நண்பரும் பிரிட்டிஷ் எழுத்தாளருமான டாக்டர் மோனிகா ஃபெல்டன் அம்மையார் மறைந்து விட்டார்.

மோனிகா அம்மையாரை நான் இழந்த கையோடு மற்றோர் இழப்பு நேர்ந்தது. ஆரம்ப காலத்திலிருந்தே தென் இந்திய ஒத்துழையாமைப் போராட்டத்தில் எனக்கு சகாவாக இருந்த பெரும் தீரரான ஸ்ரீ எஸ். ராமநாதன் மறைந்து விட்டார். அவர் வீட்டில் தடுக்கி விழுந்து இடுப்பை முறித்துக் கொண்டார். ஸ்டான்லி ஆஸ்பத்திரியில் சிறந்த சிகித்சை தந்தும், பலனின்றிக் காலமாகி விட்டார்.

1919ல் தமக்கு வக்கீல் தொழிலில் பிரகாசமான எதிர்காலம் இருந்தும் அதை ஒரு பொருட்டாகக் கருதாமல் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட ஸ்ரீ ராமநாதன் அன்றைய இளைஞர்களில் மிகவும் குறிப்பிட்டுப் போற்ற வேண்டியவரானார். புரட்சியில் தீவிரமான ஈடுபாடு கொண்டார். மிகவும் விசுவாசத்துடன் பணி புரிந்த தொண்டர் அவர். அந்த நாட்களில் செய்ய வேண்டியிருந்த கடுமையான பணிகளில் அவரை ஓர் உற்சாகமுள்ள சகாவாகப் பெற்றிருந்தது என்னுடைய நல்ல அதிருஷ்டமாகும்.

சென்னை பிரஸிடென்ஸி காலேஜில் படித்துச் சிறப்பாகத் தேறிய ஸ்ரீ ராமநாதன்தான், அந்த நாட்களில் காந்தியப் போராட்டத்தில் பட்டதாரிகள் மிகக் குறைவாக இருந்த போது, ஸ்ரீ கே. சந்தானத்தையும் ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரியையும் இப்போராட்டத்தில் ஈடுபடுத்தினார். சட்டசபைகளில் காங்கிரஸ் இடம் பெற வேண்டும் என்று ஸ்வராஜ்யக் கட்சி தீர்மானித்த போது, அதை ஏற்கப் பிடிக்காமல், கதர்ப் பணியில் இறங்கினார் ஸ்ரீ ராமநாதன். திருப்பூர்க் கதர் இயக்கம் பெற்ற பலத்துக்கு அவரது நிர்வாகத் திறனே முற்றிலும் காரணமாகும். 1937ல் சென்னை மாகாணம் பிரிக்கப்படாமல் இருந்த போது, நான் அமைத்த மந்திரிசபையில் அவர் அங்கம் வகித்தார். ஜமீந்தாரி ஒழிப்பு, தீண்டாமை ஒழிப்பு, விவசாயக் கடன் நிவாரணம், மதுவிலக்கு முதலியவற்றைத் தொடங்கி வைப்பதில் அவர் பெருத்த உதவி புரிந்தார். தமது மனைவியையும், என்னையும், இன்னும் அநேக நண்பர்களையும் பிரிவுத் துயரத்தில் ஆழ்த்திவிட்டுச் சென்றுவிட்டார்.



திரு எஸ். ராமநாதன்

# பொன்னியின் செல்வன்

முப்பத்திரண்டாம் அத்தியாயம்

## பிரம்மாவின் தலை!

வந்தியத்தேவன் குடந்தை ஜோதிடரின் வீட்டுக்குள் இரண்டாம் முறையாகப் பிரவேசித்தபோது அவனுடைய உள்ளத்தில் ஓர் அதிசயமான இன்ப உணர்ச்சி உண்டாயிற்று. அந்தச் சிறிய வீட்டுக்குள்ளேதான் முதன் முதலாக அவன் இளைய பிராட்டி குந்தவையைப் பார்த்தான். அவளுடைய செந்தாமரை வதனத்தையும், வியப்பினால் விரிந்த கரிய பெரிய கண்களையும் பார்த்துத் திகைத்து நின்றான். அவளுடைய தேனினும் இனிய தீங்குரல் அவன் செவியில் விழுந்ததும் அங்கேதான். இந்த நினைவுகள் எல்லாம் அலை மோதிக் கொண்டு அவன் உள்ளத்தில் பொங்கி வந்தன. அவற்றினால்





அமரர் கல்கி

அவன் செவிகள் இனித்தன; உள்ளம் இனித்தது; உடல் முழுதுமே இனித்துச் சிலிர்த்தது!

சோதிடர் அப்போதுதான் மாலை வேளைப் பூஜைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார். இவனைப் பார்த்ததும், "வா அப்பனே, வா! வாணர்குலத்து வல்லத்தரையன்தானே?" என்றார்.

"ஆம், சோதிடரே! உம் ஜோசியம் முன் பின்னாக இருந்தாலும் உம்முடைய ஞாபக சக்தி பிரமாதம்!" என்றான் வந்தியத்தேவன்.

"தம்பி! சோதிட சாஸ்திரம் பயில்வதற்கு ஞாபக சக்தி மிக அவசியம். கிரகங்கள், நட்சத்திரங்கள், தசைகள், புக்திகள், யோகங்கள் இவை லட்சம் விதமான சேர்க்கை உள்ளவை. அவ்வளவையும் மனத்தில் வைத்துக் கொண்டு, வருஷம், மாதம், நாள், நாழிகை, வினாடி, ஒரு வினாடியில் நாற்றில் ஒரு பங்கு நேரம், — இவ்வளவையும் கணக்கிட்டுப் பார்த்தல்லவா சொல்ல வேண்டும்! போகட்டும்;

என் ஜோசியம் முன் பின்னாக இருந்தாலும் என்றீயே அதன் பொருள் என்ன? நான் உனக்குச் சொன்னது ஒன்றும் பலிக்க வில்லையா?''

'' அதையும் உங்கள் ஜோசியத்திலேயே கண்டுபிடித்துக் கொள்ள வழி இல்லையா?''



''உண்டு, உண்டு! ஜோசியத்தினாலும் கண்டு பிடிக்கலாம்; ஊகத்தினாலும் கண்டு பிடிக்கலாம். உனக்கு நான் கூறியவை பலித்துத்தான் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் நீ திரும்பவும் 'இந்தக் குடிசைக்குள் வருவாயா?''

''ஆமாம்; ஆமாம். உம்முடைய சோதிடம் பலிக்கத்தான் செய்தது.''

''அப்படிச் சொல்லு! எந்த விதத்தில் பலித்தது அப்பனே?''

''நீர் எனக்குச் சொன்னது அப்படியே பலித்தது. 'நீ போகிற காரியம் நடந்தால் நடக்கும்; நடக்கா விட்டால் நடக்காது' என்றீர். அந்தப் படியே நடந்தது. 'நடந்தது' என்று நான் சொல்வதுகூடப் பிசகு. என்னைக் கண்டவுடனேயே ஒட்டம் பிடித்து ஓடிற்று!''

''தம்பி! நீ பெரிய வேடிக்கைக் காரனாயிருக்கிறாய்!''

''உண்மையான வார்த்தை. நான் வேடிக்கைக்காரன்தான்; அத்துடன் கொஞ்சம் கோபக்காரன்.''

''இந்தக் குடிசைக்குள் வரும்போது கோபத்தை வெளியில் மூட்டை கட்டி வைத்துவிட்டு வரவேண்டும்.''

''அப்படிச் செய்யலாம் என்றுதான் பார்த்தேன். ஆனால் உம்முடைய சீடனை விட்டு வாசலில் காணவில்லை. கோப மூட்டையைத் திண்ணையில் வைத்தால் யாராவது அடித்துக் கொண்டு போய் விட்டால் என்ன செய்கிறது என்று உள்ளே கொண்டு வந்து விட்டேன். உம்முடைய சீடன் எங்கே சோதிடரே! போன தடவை அவன் என்னை வாசலில் தடுத்து நிறுத்தப் பார்த்தது அப்படியே என் நினைவில் இருக்கிறது!''

''இன்றைக்கு ஐப்பசி அமாவாசை அல்லவா? அதற்காக அவன் கொள்ளிடக்கரைக்குப் போயிருப்பான்.''

''அமாவாசைக்கும் கொள்ளிடக் கரைக்கும் என்ன சம்பந்தம்?''

''கொள்ளிடக் கரையில் காளாமுகர்களின் மகா சங்கம் இன்று நடைபெறுகிறது. என் சீடன் காளாமுகத்தைச் சேர்ந்தவன்.''

''சோதிடரே! நான் சைவ மதத்தையே விட்டுவிடலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்.''

''விட்டு விட்டு...''

''உமது சிநேகிதர் ஆழ்வார்க்கடியார் நம்பி இருக்கிறாரே...''

''திருமலையைச் சொல்கிறாயாக்கும்!''

''ஆம்; அவரிடம் தீட்சை பெற்று உடம்பெல்லாம் நாமத்தைப் போட்டுக் கொண்டு வீர வைஷ்ணவனாகிவிடலாம் என்று உத்தேசிக்கிறேன்.''

''அது ஏன் அப்படி?''

''காளாமுக சைவர்கள் சிலரைப் பார்த்தேன். இங்கே வருகிற வழியிலே கூடப் பார்த்தேன். அவர்களையும், அவர்கள் வைத்திருக்கும் மண்டை ஓடுகளையும் பார்த்த பிறகு சைவத்தை விட்டுவிடலாம் என்று தோன்றுகிறது.''

''தம்பி! எத்தனையோ போர்க் களங்களைப் பார்த்திருக்கும் உனக்கு மண்டை ஓடுகளைக் கண்டு என்ன பயம்?''

''பயம் ஒன்றுமில்லை. அருவருப்புத்தான். போர்க்களத்தில் பகைவர்களைக் கொல்வதற்கும் மண்டை ஓடுகளை மாலையாகப் போட்டுக் கொள்வதற்கும் என்ன சம்பந்தம்?''

''உன்னுடைய எஜமானர் ஆதித்த கரிகாலர் வீர பாண்டியனுடைய தலையை வெட்டி எடுத்துக் கொண்டு வந்து ஊர்வலம் விடவில்லையா?''

''அவர் ஏதோ சபதம் செய்திருந்தபடியால் அவ்விதம் செய்தார். அதற்காகப் பிறகு எவ்வளவோ வருத்தப்பட்டார். அவர்கூட மண்டை ஓட்டை மாலையாகப் போட்டுக் கொள்ளவில்லை; கையிலும் எடுத்துக் கொண்டு திரியவில்லையே? காளாமுகர்கள் எதற்காக அப்படிச் செய்கிறார்கள்?''

''வாழ்க்கை அநித்தியம் என்பதை மறந்து விடாமலிருப்பதற்காக அவர்கள் அவ்வாறு செய்கிறார்கள். நீயும் நானும் திருநீறு பூசிக் கொள்கிறோமே, அது மட்டும் என்ன? இந்த மனித உடம்பு நிலையானது அல்ல, ஒரு நாள் சாம்பராகப் போகிறதென்பதை மறந்து விடாமல் இருப்பதற்காகத்தானே திருநீறு பூசிக் கொள்கிறோம்?''

''மனித தேகம் அநித்யம் என்பது சரிதான். இது எரிந்து சாம்பராகும், அல்லது மண்ணோடு மண்ணாகும். சிவபெருமானுடைய திருமேனி அப்படியல்லவே! பரமசிவன் ஏன் கையில் மண்டை ஓட்டை வைத்திருக்கிறார்?''

''தம்பி! சிவபெருமானுடைய கையிலுள்ள மண்டை ஓடு ஆணவத்தைக் குறிக்கிறது. ஆணவத்தை வென்றால் ஆனந்த நிலை ஏற்படும் என்பதைக் காட்டுகிறது. சிவபெருமான் கையில் மண்டை ஓட்டுடன் ஆனந்த நடனம் செய்கிறார் அல்லவா?''



''மண்டை ஓடு எப்படி ஆணவத்தைக் குறிக்கும்?''

''சொல்கிறேன். பிரம்ம தேவனும் திருமாலும் ஒரு சமயம் கர்வம் கொண்டார்கள். 'நான் பெரியவன்; நான்தான் பெரியவன்' என்று சண்டையிட்டார்கள். சிவன் அவர்களுக்கு நடுவில் வந்தார். 'என்னுடைய சிரசை ஒருவரும், என்னுடைய பாதத்தை ஒருவரும் கண்டுபிடித்துக் கொண்டு வாருங்கள். யார் பார்த்துவிட்டு முதலில் வருகிறாரோ, அவர்தான் உங்களில் பெரியவர்' என்றார். மகா விஷ்ணு வராக உருவம் கொண்டு சிவனுடைய பாதங்களைப் பார்ப்பதற்குப் பூமியைக் குடைந்து கொண்டு சென்றார். பிரம்மா அன்னப் பறவையின் உருக் கொண்டு வானத்தில் பறந்து சென்றார். திருமால் திரும்பி வந்து சிவனுடைய அடியைக் காண முடியவில்லை என்று உண்மையை ஒப்புக் கொண்டார். பிரம்மா திரும்பி வந்து சிவனுடைய முடியைப் பார்த்துவிட்டதாகப் பொய் சொன்னார்! அப்போது சிவன் பிரம்மாவுக்கிருந்த ஐந்து தலைகளில் ஒன்றைக் கிள்ளி எடுத்து அவரைத் தண்டித்தார். ஆணவம் காரணமாகப் பிரம்மா சண்டையிட்டுப் பொய் சொன்னபடியால் அவருடைய தலை ஆணவத்துக்குச் சின்னமாயிற்று...''

வந்தியத்தேவன் எதையோ நினைத்துக்கொண்டவன்போல் இடிஇடி என்று சிரித்தான்.

''என்னத்தைக் கண்டு இப்படிச் சிரிக்கிறாய் தம்பி!''

''ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது அதனால் சிரித்தேன்.''

''அது என்ன விஷயம்? இரகசியம் ஒன்றுமில்லையே?''

''இரகசியம் என்ன? பிரம்மாவைத் தண்டிப்பது போல் என்னையும் தண்டிப்பதாயிருந்தால், குறைந்தபட்சம், பதினாயிரம் தலையாவது எனக்கு இருந்தால்தான் சரிக்கட்டி வரும்! அதை எண்ணித்தான் சிரித்தேன்.''

''அத்தனை பொய்கள் சொல்லியிருக்கிறாயாக்கும்?''

''ஆம், சோதிடரே! அது என் ஜாதக விசேஷம் போலிருக்கிறது. பொன்னியின் செல்வரைச் சந்தித்த பிறகு உண்மையே சொல்வதென்று தீர்மானித்திருந்தேன். ஒரு தடவை ஒரு முக்கியமான உண்மையையும் சொன்னேன். அதைக் கேட்டவர்கள் நகைத்தார்கள்; ஒருவரும் நம்பவில்லை!''

''ஆம்; தம்பி! காலம் அப்படிக் கெட்டுப்போய்விட்டது. இந்த நாளில் பொய்யையே ஜனங்கள் நம்புவதில்லை; உண்மையை எப்படி நம்பப் போகிறார்கள்?''

''உம்முடைய ஜோதிடத்தின் கதியும் அப்படித்தானாக்கும்! சோதிடரே! இளவரசர் அருள்மொழி வர்மரைப் பற்றி நீர் கூறியது நினைவிருக்கிறதா? வானத்திலே வடதிசை அடிவாரத்தில் நிலைத்து நின்று ஒளிரும் துருவ நட்சத்திரம் போன்றவர் பொன்னியின் செல்வர் என்று நீர் சொல்லவில்லையா?''

''சொன்னேன்; அதனால் என்ன?''

''அவரைப் பற்றிய செய்தியை நீர் கேள்விப்படவில்லையா?''

''கேள்விப்படாமல் எப்படி இருக்க முடியும்? நாடு நகரமெல்லாம் அதே பேச்சாகத்தானே இருக்கிறது?''

''துருவ நட்சத்திரம் கடலில் மூழ்கிவிட்டதென்று நீர் கேள்விப்பட்டதுண்டா?''

''துருவ நட்சத்திரம் கடலில் மூழ்காது. ஆனால் அந்த நிலைகுலையா நட்சத்திரத்தையும் மேகங்கள் சில சமயம் மறைக்கலாம் அல்லவா? இன்றைக்குக் கூட வடதிசையில் மேகங்கள் குமுறுகின்றன. இன்று இரவு நீர் எவ்வளவு முயன்றாலும் துருவ நட்சத்திரத்தைக் காண முடியாது. அதனால் அந்த நட்சத்திரம் இல்லாமற் போய்விடுமா?''

''அப்படியா சொல்கிறீர்? பொன்னியின் செல்வரைப் பற்றிய உண்மையான செய்தி ஏதாவது உமக்குத் தெரியுமா?''

''எனக்கு எப்படித் தெரியும்? நீதான் அவருடன் கடைசியாகக் கடலில் குதித்தாய் என்று பேச்சாயிருக்கிறது. தெரிந்திருந்தால் உனக்கு அல்லவா தெரிந்திருக்கவேண்டும்? உன்னைக் கேட்கலாம் என்று எண்ணியிருந்தேன்.''

வந்தியத் தேவன் பேச்சை மாற்ற விரும்பி, ''சோதிடரே! வால் நட்சத்திரம் இப்போது எப்படி இருக்கிறது?'' என்று வினவினான்.

''மிக நீளமாகப் பின்னிரவு நேரங்களில் தெரிகிறது. இனிமேல் நீளம் குறைய வேண்டியதுதான். தூமகேதுவினால் விபத்து ஏதேனும் ஏற்படுவதாயிருந்தால் அதிசீக்கிரத்தில் அது ஏற்பட்டாக வேண்டும். கடவுளே! இராஜகுலத்தில் யாருக்கு என்ன நேரிடுமோ என்னமோ?'' என்றார் சோதிடர்.

வந்தியத்தேவனுடைய உள்ளம் அதிவேகமாக இங்குமங்கும் பாய்ந்தது. தஞ்சையில் பாரிச வாயு பீடித்துப் படுத்த படுக்கையாயிருக்கும் சுந்தர சோழரும், நாகைப்பட்டினத்தில் நடுக்கு சுரம் வந்து கிடக்கும் பொன்னியின் செல்வரும், கடம்பூர் மாளிகையில் நந்தினியைச் சந்திக்கப் போகும் ஆதித்த கரிகாலரும் இராஜ்யத்துக்கு ஆசைப்பட்டு மக்களின் கோபத்துக்குப் பாத்திரமாகியிருக்கும் மதுராந்தகரும், கையில் கொலை வாளை வைத்துக்கொண்டு கொந்

கம் நந்தினியும் அவனுடைய உள்ளத்தில் வரிசையாகப் பவனி வந்தார்கள்.

''அதெல்லாம் போகட்டும், சோதிடரே! இராஜ குலத்தாரின் விஷயம் நமக்கு என்னத்திற்கு? நான் இப்போது மேற்கொண்டு போகும் காரியம் எப்படி முடியும், சொல்லுங்கள்!''

''முன்னே உனக்குச் சொன்னதைத்தான் இப்போதும் சொல்ல வேண்டியிருக்கிறது. அப்பனே! எத்தனையோ விபத்துக்கள் உனக்கு வரும்; அவற்றையெல்லாம் வெற்றி கொள்வதற்கு எதிர்பாராத உதவிகளும் உனக்குக் கிடைக்கும்!'' என்றார் சோதிடர்.

இப்போது வாசலில் வந்துகொண்டிருப்பது விபத்தா, உதவியா என்று வந்தியத் தேவன் எண்ணமிட்டான். ஏனெனில், அச்சமயம் வாசலில் ஆடவர்களின் குரல்களுடன் பெண்களின் குரல்களும் கேட்டன. இருவரும் வாசற்புறத்தை நோக்கினார்கள்.

மறுநிமிடம் வானதி தேவியும் அவளுடைய பாங்கியும் உள்ளே வந்தனர்.

வந்தியத் தேவன் எழுந்து நின்று மரியாதையுடன் ''தேவி! மன்னிக்கவேண்டும். தாங்கள் இங்கே வரப்போகிறீர்கள் என்று தெரிந்திருந்தால், நான் வந்திருக்க மாட்டேன்...'' என்றான்.

## முப்பத்திமூன்றும் அத்தியாயம்

# வானதி கேட்ட உதவி

''ஐயா! என்னிடம் ஏன் அவ்வளவு கோபம்? தங்களுக்கு நான் என்ன தீங்கு செய்தேன்?'' என்ற கொடும்பாளூர் இளவரசியின் தீனமான குரல் வந்தியத் தேவனை உருக்கி விட்டது. இந்தப் பெண்ணிடம் தான் உண்மையில் எதற்காகக் கோபம் கொள்ளவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. பூங்குழலி ஒரு கணம் அவன் மனக்கண் முன் வந்து மறைந்தாள். அவளுக்காக இந்தப் பெண்ணிடம் கோபம் கொள்ளுவது என்ன நியாயம்?

''அம்மணி! மன்னிக்க வேண்டும். அந்த மாதிரி ஒன்றும் நான் சொல்லவில்லை. தாங்கள் சோதிடரைப் பார்த்து விட்டுப் போகும்வரையில் நான் வெளியில் காத்திருந்திருப்பேன் என்றுதான் சொன்னேன். எனக்கு ஒன்றும் அவசரமில்லை. இப்போதுகூட...''

''தாங்கள் வெளியேற வேண்டிய அவசியம் ஒன்றுமில்லை. தங்களுக்கு அவசரம் இல்லை என்று அறிந்து மகிழ்ச்சி அடைகிறேன். உண்மையில் நான் இங்கே சோதிடரைப் பார்க்க வரவில்லை. இவருடைய சோதிடத்தில் எனக்குக் கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லாமற் போய் விட்டது....!''

''தேவி! தங்கள் சித்தம் என் பாக்கியம்! ஒருகாலத்தில் என் சோதிடம் பொய்யாகவில்லை என்பதைத் தாங்களே உணர்வீர்கள். உணர்ந்து, இந்த ஏழையைப் பாராட்டுவீர்கள்!'' என்றார் சோதிடர்.

''அப்போது பார்த்துக் கொள்ளலாம்!'' என்று வானதி கூறிவிட்டு வந்தியத் தேவனைப் பார்த்து, ''ஐயா! நான் தங்களைப் பார்க்கத்தான் இங்கே வந்தேன். வழியில் தாங்கள் குதிரை மீது சென்றதைப் பார்த்தேன். நின்று விசாரிப்பீர்கள் என்று நினைத்தேன். பராமுகமாகப் போய் விட்டீர்கள்! அதைப் பற்றி நான் அதிகமாக ஆச்சரியப்படவில்லை. இந்த அநாதைப் பெண்ணிடம் அவ்வளவு அக்கறை எதற்காக இருக்க வேண்டும்?'' என்றாள்.

வந்தியத் தேவனுடைய கண்களில் கண்ணீர் வந்துவிடும் போலிருந்தது.

''தேவி! இது என்ன வார்த்தை? கொடும்பாளூர் பராந்தக சிறிய வேளாரின் செல்வப் புதல்வி, தென் திசைச் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரியின் வளர்ப்புக் குமாரி, பழையாறை இளைய பிராட்டியின் அந்தரங்கத்துக்கு உகந்த தோழி. இத்தகைய தங்களை அநாதைப் பெண் என்று யார் ஒப்புக்கொள்வார்கள்? — பாதையில் நின்று விசாரிப்பது மரியாதைக் குறைவாயிருக்கும் என்று வந்து விட்டேன். வேறொன்றுமில்லை. என்னால் ஏதாவது ஆக வேண்டிய காரியம் இருந்தால்...''

''ஆம், ஐயா! தங்களிடம் ஒரு முக்கியமான உதவி கோருவதற்காகத்தான் இந்த வீட்டுக்குள் நான் வந்தேன்....''

''சொல்லுங்கள்: என்னால் முடியக் கூடிய காரியமாயிருந்தால்...''

''தங்களால் முடியாத காரியம்கூட ஒன்று இருக்க முடியுமா, என்ன? இலங்கைப் பிரயாணத்தின்போது தங்களுக்கு நேர்ந்தவற்றையெல்லாம் ஓரளவு நானும் கேட்டறிந்திருக்கிறேன். நான் கோரும் உதவியை அளிப்பதாக முதலில் வாக்குத் தர முடியுமா?''

வந்தியத் தேவன் தயக்கத்துடன், ''தேவி! உதவி எத்தகையது என்று சொன்னால் நல்லது!'' என்றான்.

''ஆம்; தங்களை ஏமாற்றி நான் வாக்குறுதி பெறக் கூடாதுதான். ஆகையால் காரியத்தைச் சொல்லி விடுகிறேன்.

சோதிடருக்கும் தெரியலாம்; அதனால் பாதகம் இல்லை. நான் புத்த தர்மத்தை மேற்கொண்டு பிக்ஷுணி ஆகிவிடுவது என்று தீர்மானித்திருக்கிறேன்...''

''என்ன? என்ன?''

''இது என்ன வார்த்தை?''

''கூடவே கூடாது!''

''உலகம் பொறுக்காது!''

''நடவாத காரியம்!''

இவ்வாறெல்லாம் சோதிடரும் வந்தியத்தேவனும் மாற்றி மாற்றிச் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்து விட்டு, வானதி, ''ஆம்; புத்த சந்நியாசினி ஆவதென்று முடிவு செய்து விட்டேன். அதில் ஏன் உங்களுக்கு அவ்வளவு ஆட்சேபம்? தவறு என்ன? பழந் தமிழ் நாட்டில் எத்தனையோ பெண்கள் துறவறம் மேற்கொண்டதில்லையா? மாதவியின் புதல்வி மணிமேகலை துறவறம் நடத்தித் தெய்வத் தன்மை பெறவில்லையா? 'மணிமேகலா தெய்வம்' என்று அவளை நாம் இன்று போற்றவில்லையா? அவ்வளவு பெரிய ஆசையெல்லாம் எனக்குக் கிடையாது. இந்தப் பயனற்ற வாழ்க்கையை முடித்துக் கொள்ள முயன்றேன். அதில் தவறி விட்டேன். கடவுளுடைய விருப்பம் நான் உயிரோடு இன்னும் சில காலம் இருக்க வேண்டும் என்பது போலும். அப்படி இருக்கக்கூடிய காலத்தைப் புத்த மடம் ஒன்றில் சேர்ந்து ஜீவ காருண்யத் தொண்டு புரிந்து கழிக்க விரும்புகிறேன். இதற்குத் தாங்கள் எனக்கு உதவி செய்யத் தயங்க மாட்டீர்கள் அல்லவா?'' என்றாள்.

வந்தியத்தேவன் மனத்தில் ஒரு சிறிய சந்தேகம் உதித்தது. அது அவனைத் திடுக்கிடச் செய்தது.

''தேவி! தங்கள் தீர்மானம் நியாயமன்று. எனினும் அதைச் சொல்லும் உரிமை எனக்குக் கிடையாது. தங்கள் குடும்பத்தைச் சேர்ந்த பெரியவர்கள் தங்களுக்கு அதைப் பற்றி யோசனை சொல்ல வேண்டும். தங்கள் பெரிய தந்தை சேநாதிபதி பூதிவிக்கிரம கேசரி கூடிய சீக்கிரம் திரும்பி வரப் போகிறார் என்று தெரிகிறது....''

''ஐயா! நான் யாருக்காகவும் காத்திருக்கப் போவதில்லை; யாருடைய யோசனையையும் கேட்கப் போவதுமில்லை. தீர்மானமாக முடிவு செய்து விட்டேன். தங்களுடைய உதவியைக் கோருகிறேன்.....''

''இது விஷயத்தில் நான் என்ன உதவி செய்யக் கூடும், தேவி!''

''சொல்லுகிறேன். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போவதற்காக நான் புறப்பட்டேன். அங்கே சென்று புத்த குருமார்களை அடுத்துத் தீட்சை பெற்றுக் கொள்ள எண்ணிக் கிளம்பினேன். வழித் துணைக்குத் தாங்கள் என்னுடன் நாகைப்பட்டினம் வரையில் வர வேண்டும். அதுவே நான் கோரும் உதவி!''

வந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. கொடும்பாளூர் இளவரசி இலேசுப்பட்டவள் அல்ல. நாமும் இளைய பிராட்டியும் பேசிக் கொண்டது அரைகுறையாக இவள் காதில் விழுந்திருக்க வேண்டும். தன்னிடம் முழு விவரங்களையும் தெரிந்து கொள்ளப் பார்க்கிறாள். நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் போகப் புறப்பட்டது இளவரசரை அங்கே சந்திக்கும் நோக்கத்துடனேதான்! அதற்கு ஒரு நாளும் நான் உடந்தையாயிருக்க முடியாது. ''அம்மணி! ரொம்பவும் மன்னிக்க வேண்டும். தாங்கள் கோரும் உதவி என்னுடைய சக்திக்கு அப்பாற்பட்டது.''

''இது என்ன விந்தை? ஈழ நாட்டுக்குச் சென்று எத்தனை எத்தனையோ அற்புதங்களைச் சாதித்து வந்தவருக்கு இந்த அநாதைப் பெண்ணை நாகைப்பட்டினத்தில் கொண்டு போய்ச் சேர்ப்பது முடியாத காரியமாகுமா?''

''தேவி! முடியாத காரியம் ஒன்றுமில்லை. ஆனால் நான் இச்சமயம் மேற்கொள்ள இயலாது. முதன் மந்திரியும் இளையபிராட்டியும் என்னை அவசரமாகக் காஞ்சிக்குப் போகும்படி கட்டளையிட்டிருக்கிறார்கள். அவர்கள் கொடுத்த ஓலையுடன் போகிறேன். மிக முக்கியமான இராஜாங்கக் காரியமாகப் போகிறேன். ஆகையினால்தான் முடியாது என்று சொன்னேன். வேறொரு சந்தர்ப்பமாயிருந்தால்....''

''ஆம், ஆம்! விருப்பமில்லாவிட்டால் எத்தனையோ காரணங்கள் சொல்லலாம். அதனால் பாதகம் இல்லை. தனியாகப் பிரயாணம் செய்வது என்ற எண்ணத்துடனேதான் கிளம்பினேன். வழியில் சிற்சில இடங்களில் காளாமுகர்களின் கூட்டங்களைப் பார்த்ததும் கொஞ்சம் பயம் உண்டாயிற்று. சகல ஜீவர்களையும் காப்பாற்றக் கடமைப்பட்ட கடவுள் இருக்கிறார். அவரிடம் பாரத்தைப் போட்டு விட்டுப் புறப்படுகிறேன். உலகத்தைத் துறந்து சந்நியாசினியாக முடிவு செய்த ஒரு பேதைப் பெண்ணை யார் என்ன செய்து விடுவார்கள்? போய் வருகிறேன், சோதிடரே!'' என்று கூறிவிட்டு வானதி புறப்பட்டாள். அவளைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டே சோதிடர், ''தேவி! தேவி! இருட்டும் சமயமாகி விட்டதே! அமாவாசைக் கங்குல். அதோ வடகிழக்கில்

மேகங்கள் குமுறுகின்றன. இரவு இந்த ஏழையின் குடிசையில் தங்கி விட்டுக் காலையில் போகலாமே!'' என்றார்.

''இல்லை, சோதிடரே! மன்னிக்க வேண்டும். இரவு திருவாரூர் போய்த் தங்குவதாக எண்ணம். இந்த மனிதர் தான் துணைக்கு வர மறுத்து விட்டார். திருவாரூரில் யாராவது கிடைக்காமலா போகிறார்கள்? அப்படி நான் என் உயிரைப் பற்றிக் கவலைப் படவும் இல்லை. இதனால் யாருக்கு என்ன உபயோகம்?''

சோதிடர் காதிலும் வந்தியத்தேவன் காதிலும் கடைசியாகக் காதிலே விழுந்த வார்த்தைகள் இவைதான். வாசலில் காத்திருந்த பல்லக்கில் வானதி ஏறிக் கொண்டாள். பல்லக்கு மேலே சென்றது.

**ப**ல்லக்கு கண்ணுக்கு மறையும் வரையில் வந்தியத்தேவனும் சோதிடரும் அதைப் பார்த்த வண்ணம் நின்றார்கள்.

பிறகு வந்தியத்தேவன், ''கொடும்பாளூர் இளவரசி சில காலத்துக்கு முன்பு வரையில் பெரும் பயங்கொள்ளியா யிருந்தாள். இளைய பிராட்டியின் மற்றத் தோழிகள் இவளை அதற்காகப் பரிகசித்துக் கொண்டிருந்தார்கள். பொம்மை முதலையை நதியில் மிதக்கவிட்டு இவளைப் பயமுறுத்திப் பார்த்தார்கள்; நான்கூட அதில் ஏமாந்து போனேன். இப்போது திடீரென்று இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு தைரியம் எப்படி வந்தது? இவள் தனியே பிரயாணம் செய்யக் கிளம்பியது என்ன விந்தை? இளையபிராட்டி இதற்குச் சம்மதித்ததுதான் எப்படி?'' என்றான்.

''எனக்கும் அது ஆச்சரியத்தையே அளிக்கிறது. சென்ற முறை இப்பெண் இந்தக் குடிசைக்கு வந்திருந்த போது, திடீரென்று மயக்கம் போட்டு விழுந்து விட்டாள்; தயங்கித் தயங்கி ஈனஸ்வரத்தில் பேசினாள். அந்தக் கொடும்பாளூர் இளவரசிதானா இவள் என்றே சந்தேகமாயிருக்கிறது. இன்று எவ்வளவு படபடப்பாகவும் துணிச்சலாகவும் பேசினாள்?''

''இப்படிப்பட்ட திடீர் மன மாறுதலுக்கு என்ன காரணமாயிருக்கும் என்று நினைக்கிறீர்கள்?''

''ஏதோ முக்கியமான செய்தி இவளுடைய மனத்தில் ஒரு பெரும் அதிர்ச்சியை உண்டுபண்ணியிருக்க வேண்டும்.''

''அப்படி என்ன முக்கியமான செய்தி இருக்க முடியும்?''

''ஏன்? பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டு விட்ட செய்தியே போதாதா? இந்தப் பெண்ணுக்கும் இளவரசருக்கும் திருமணம் நடக்கக் கூடும் என்று பேச்சாயிருந்ததே!''

இவ்விதம் சோதிடர் கூறியபோது, வந்தியத்தேவன், 'பொன்னியின் செல்வரைக் கடல் கொண்டுவிட்ட செய்தியா அல்லது அவர் பிழைத்து நாகப்பட்டினத்தில் இருக்கிறார் என்ற செய்தியா, அல்லது பூங்குழலியைப் பற்றி நான் கூறிய செய்தியா, எது இவளுக்கு இத்தகைய அதிர்ச்சியை அளித்திருக்கக் கூடும்?' என்று சிந்தனை செய்தான்.

''ஆம்; சோதிடரே! கொடும்பாளூர் வம்சத்தார் பரம்பரையான வீர சைவர்களாயிற்றே! இந்தப் பெண்ணுக்குத் திடீர் என்று புத்த மதத்தில் பற்று உண்டாவானேன்?'' என்றான்.

''பூர்வ ஜன்ம வாசனையாயிருக்கலாம்'' என்றார் சோதிடர்.

''நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்குப் புறப்படுவானேன்?''

''அதுதான் எனக்கும் வியப்பை அளிக்கிறது!''

''உம்முடைய சோதிட சாஸ்திரத்தில் பார்த்துச் சொல்ல முடியாதா?''

''தம்பி! சோதிட சாஸ்திரத்தின் மூலம் இதை எப்படி அறியலாம்? இது ஒற்றாடல் சாஸ்திரத்தைச் சேர்ந்தது.''

''ஒற்றாடல் என்று ஒரு சாஸ்திரமா?''

''ஏன் இல்லை? பொய்யாமொழிப் புலவரின் திருக்குறளைப் பற்றி நீ கேட்டதில்லையா?''

''அப்படி ஒரு நூல் உண்டு என்று கேட்ட ஞாபகமாயிருக்கிறது.''

''அந்த நூலில் 'ஒற்றாடல்' என்று ஓர் அதிகாரம் இருக்கிறது. அதில் பத்துப் பாடல்கள் இருக்கின்றன.''

''அப்படியா? அவற்றில் இரண்டொரு நல்ல பாடல்கள் சொல்லுங்கள்!''

''எல்லாம் நல்ல பாடல்கள்தான். இதைக் கேள்:—

**'வினைசெய்வார் தஞ்சுற்றம்**
**வேண்டாதார் என்றாங்கு**
**அனைவரையும் ஆராய்வது ஒற்று.'**

அரசன் தன் கீழ் ஊழியம் செய்வோரையும் தன்னுடைய சொந்த உறவினரையும் அவ்வாறே தன் பகைவர்களையும் ஒற்றர்கள் வைத்து ஆராய்ந்து கொள்ள வேண்டும் என்கிறார் வள்ளுவர். இன்னும் கேள்:

**'துறந்தார் படிவத்தாராகி**
**இறந் தாராய்ந்து**
**என்செயினும் சோர்விலது ஒற்று.'**

துறவிகளைப் போல் வேடம் பூண்டும், செத்தவர்களைப் போலப் பாசாங்கு செய்தும், எதிரிகள் எவ்வளவு துன்புறுத்தினாலும் இரகசியத்தை வெளியிடாமலும் சோர்வில்லாமல் உழைப்பவன் ஒற்றன் என்று வள்ளுவர் கூறு

கிறார். அரசர்கள் ஓர் ஒற்றனுடைய காரியத்தை இன்னொர் ஒற்றனைக் கொண்டு ஒற்றறிய வேண்டும் என்றும் அவர் சொல்லியிருக்கிறார்.

'ஒற்றொற்றித் தந்த
பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல்.'

இந்தப் பாடல்களை யெல்லாம் நீ கேட்ட தில்லை யென்று சொல்கிறாய்?''

வந்தியத் தேவனுக்கு ஒரே வியப்பாய்ப் போய்விட்டது. இனி அவகாசம் கிடைத்ததும் திருக்குறளைப் படித்து விட்டுத்தான் வேறு காரியம் பார்ப்பது என்று தீர்மானித்துக் கொண்டான். ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் இப்படி யெல்லாம் இராஜரீக முறைகளைப் பற்றி எழுதியவர் எத்தகைய அறிவாளியா யிருக்க வேண்டும் ?

இன்னும் சற்றுப் பேசிக் கொண்டிருந்துவிட்டு வந்தியத்தேவன் புறப்பட்டான். ''இன்றிரவு இங்கே தாமதித்து விட்டுக் காலையில் போகலாமே?'' என்று சோதிடர் கூறியதை அவன் கேட்கவில்லை.

''இன்னொரு சமயம் வருகிறேன்; அப்போது தங்கள் விருந்தாளியா யிருக்கிறேன்'' என்றான்.

''இன்னொரு சமயம் நீ இங்கு வரும் போது என்னுடைய சோதிடங்கள் பலித்திருப்பதைக் காண்பாய்!'' என்றார் சோதிடர்.

''ஐயா, சோதிடரே! நீர் சோதிடம் ஒன்றுமே சொல்லவில்லையே? சொல்லியிருந்தால் அல்லவா அவை பலிக்க முடியும்?'' என்று கூறி நகைத்துக்கொண்டே வந்தியத்தேவன் குதிரை மீது ஏறிப் புறப்பட்டான்.

சோதிடர் வீட்டிலிருந்து சற்றுத் தூரம் வரையில் ஒரே பாதைதான் இருந்தது. பல்லக்குச் சென்ற பாதையிலேயே அவனும் போக வேண்டியிருந்தது. பின்னர், பாதைகள் இரண்டாகப் பிரிந்தன. ஒரு பாதை, வடக்கு நோக்கிக் கொள்ளிடக் கரைக்குச் சென்றது. இன்னொன்று, தென்கிழக்காகத் திருவாரூர் நோக்கிச் சென்றது. திருவாரூர்ச் சாலையில் வெகு தூரத்தில் பல்லக்குப் போய்க் கொண்டிருப்பதை வந்தியத் தேவன் பார்த்தான். ஒரு கணம் அவனுடைய உள்ளம் தத்தளித்தது. கொடும்பாளூர் இளவரசி கேட்ட உதவியை மறுக்க வேண்டி வந்துவிட்டதே ! உண்மையிலேயே அவளுக்கு உதவி தேவையாயிருக்குமானால்..... வழியில் அபாயம் ஏதேனும் ஏற்படுமானால்.... பின்னால் அந்தச் செய்தி தெரியும் போது என்னை நானே மன்னித்துக் கொள்ள முடியுமா? வழித் துணை போக மறுத்ததுபற்றி நெடுங் காலம் வருந்த வேண்டியிராதா? ஆயினும் என்ன செய்வது? முதன் மந்திரியும் இளையபிராட்டியும் இட்ட கட்டளை கண்டிப்பானது. வேறு காரியங்களில் நான் இப்போது தலையிட முடியாது.

இவ்வாறு முடிவு செய்து வந்தியத் தேவன் குதிரையைக் கொள்ளிடக் கரைப் பாதையில் திருப்பினான். அதே சமயத்தில் 'வீல்' என்ற ஓர் அபயக் குரல், — மிக மிக இலேசான பெண் குரல், — ஒலித்ததாகத் தோன்றியது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். பல்லக்கைக் காணவில்லை. அங்கேயிருந்த சாலை முடுக்கில் திரும்பியிருக்கக் கூடும். ஆயினும் போய்ப் பார்த்துவிட வேண்டும் என்ற முடிவுக்கு ஒரு கணத்தில் வந்து விட்டான் வந்தியத் தேவன். அதனால் அப்படி யொன்றும் தாமதம் ஏற்பட்டுவிடப் போவதில்லை. குதிரை பாய்ந்து சென்றது. வெகு சீக்கிரத்தில் சாலை முடுக்கின் அருகில் வந்து விட்டது. அங்கே அவன் கண்ட காட்சி வந்தியத் தேவனுடைய இதயமே நின்றுவிடும்படி செய்தது. பெண் ஒருத்தி சாலை ஓரத்து மரம் ஒன்றில் கட்டப்பட்டிருந்தாள். அவளுடைய வாயில் துணி அடைக்கப் பட்டிருந்தது. இருட்டும் நேரமாதலால் யார் என்று முதலில் தெரியவில்லை. அருகில் சென்று பார்த்தான். வானதியின் பல்லக்குடன் நடந்து சென்ற சேடிப் பெண் என்று தெரிந்தது. அவள் முனகிக் கொண்டே தன் கட்டுக்களை அவிழ்த்துக் கொள்ள முயன்று கொண்டிருந்தாள். வந்தியத் தேவன் குதிரையிலிருந்து பாய்ந்து இறங்கி, முதலில் வாயில் அடைத்திருந்த துணியை எடுத்துவிட்டு, கட்டுக்களையும் அவிழ்த்து விட்டான். அவ்வளவு பலமாகக் கட்டப் படவில்லை என்பது அவன் உள் மனத்தில் பதிந்தது.

''பெண்ணே! என்ன நடந்தது? சீக்கிரம் சொல்! பல்லக்கு எங்கே? உன் எஜமானி எங்கே?'' என்று பதறிக் கொண்டே கேட்டான்.

சேடிப் பெண் உளறிக் குளறி மறுமொழி கூறினாள். அந்தச் சாலை முடுக்கில் பல்லக்குத் திரும்பிய போது திடீரென்று ஏழெட்டு மனிதர்கள் பக்கத்து மரங்களின் மறைவிலிருந்து பாய்ந்து வந்தார்கள். அவர்கள் சிலருடைய கைகளில் மண்டை ஓடுகளும் சூலாயுதங்களும் காணப்பட்டன. அவர்களில் இரண்டு பேர் சேடிப் பெண்ணை மண்டையில் அடித்துக் கீழே தள்ளினார்கள். வாயில் துணியை அடைத்தார்கள். பிறகு இழுத்துக் கொண்டு போய் மரத்தில் கட்டினார்கள். இதற்குள் மற்றவர்கள் பல்லக்

குச் சுமந்தவர்களிடம் ஏதோ பயங்கரமான குரலில் சொல்லவே, அவர்கள் பாதையை விட்டு விலகிக் குறுக்கு வழியில் பல்லக்குடன் ஓடினார்கள். மற்றவர்களும் தொடர்ந்து போனார்கள். 'வீல்' என்று சத்தம் போட்டது சேடிப் பெண் தான். வானதி தேவியின் குரலே கேட்கவில்லை—இவ்விதம் கூறிவிட்டு, பல்லக்குச் சென்ற குறுக்குப் பாதையையும் அச் சேடிப் பெண் சுட்டிக் காட்டினாள்.

''பெண்ணே! நீ அந்தக் குடந்தை சோதிடர் வீட்டுக்குப் போயிரு! நான் உன் எஜமானியைக் கண்டுபிடிக்கப் பார்க்கிறேன்'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் குதிரைமீது பாய்ந்து ஏறினான். குதிரை இராஜ பாட்டையிலிருந்து திரும்பிக் குறுக்கு வழியில் சென்றது. மேடு, பள்ளம், காடு, செடி என்று பாராமல் அதிவேகமாய்ச் சென்றது. (தொடரும்)

---

# ஊசியைக் கொண்டுவர 4 பேர்!

[ பார்க்கின்ஸன் நியதியை
உருவாக்கிய நார்த்காட்
பார்க்கின்ஸன் இந்திய வர்த்தக சபை
பெடரேஷன் அழைப்பின் பேரில்
இந்தியாவில்
சுற்றுப் பயணம் செய்கிறார் ]

ஒரு குருவுக்கு நான்கு சீடர்கள் இருந்தார்கள். குருவுக்கு ஓர் ஊசி தேவைப்பட்டது. நான்கு சீடர்களும் உடனே புறப்பட்டனர். ஓர் ஊசியை வாங்கினர். அதை நான்கு பேரும் சேர்ந்து எப்படிக் கொண்டு செல்ல முடியும்? ஆகவே, ஒரு பெரிய வாழை மரத்தை வெட்டிக் கொண்டு வந்து இந்த ஊசியை அதில் செருகி இம்மரத்தை அந்நால்வரும் தூக்கிக் கொண்டு சென்றனர். இந்தக் கதையை அவிவேகப் பூரணக் கதையில் பலர் படித்திருக்கலாம். ஏற்கனவே இருந்த இந்த உண்மையைப் பிரபலப்படுத்தியவர் பார்க்கின்ஸன் அவர்கள்.

பார்க்கின்ஸன் கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் படித்தவர். பிரிட்டிஷ் போர் காரியாலயத்தில் பணி புரியும்போது தான் இவர் எப்படி அநாவசியமாக ஒருவர் வேலையைப் பலர் செய்வதாகக் காலத்தை விரயமாக்குகிறார்கள் என்பதைக் கண்டுபிடித்தார்.

பொழுது போக்குக்காக, அரசாங்கங்களில் எப்படி வேலை நடக்கிறது என்பதை ஆராய்ந்து அறிந்தார். உத்தியோகங்கள் எப்படிக் குட்டி போடுகின்றன என்பதைப் பற்றி இவர் வெளியிட்ட கட்டுரைகளே பார்க்கின்ஸன் 'லா' என்று புகழ்பெற்று விளங்குகிறது.

இந்த நியதியின் அடிப்படையான அம்சமாவது :

''தனக்கு அவகாசம் இருப்பதாகக் காட்டிக் கொண்டால் மேலும் புது வேலை வரும் என்பதாலோ அல்லது வேலையில்லாமல் இருக்கிறான் என்று சொல்லி விடுவார்களோ என்ற பயத்தினாலோ வேலையை யாரும் ஒழுங்காகச் செய்து சீக்கிரமாக முடிப்பதில்லை.

ஒரு குமாஸ்தாவை நியமித்தால் போதும் என்றால் கூட அந்த வேலையைப் பங்கிட்டு இருவர் நியமிக்கப்படுவர். மற்றவருக்கு எங்கே உத்தியோக உயர்வு கிடைத்துவிடுமோ என்று பயப்பட்டுக் கொண்டே எல்லோரும் வேலை செய்வார்கள். பலபேர் தன்கீழ் வேலை செய்தால்தான் உத்தியோக உயர்வு கிடைக்க வழியும் பலர் தன்கீழ் வேலை செய்கிறார்கள் என்ற அந்தஸ்தும் ஏற்படும். ஒரு வேலையைச் செய்ய நியமிக்கப்பட்டுள்ள ஏழு பேரும், ஒருவர் மற்றவருக்கு வேலை இருக்கும்படி ஏதாவது செய்து கொண்டே இருப்பார். ஆகவே அவர்களுக்கு ஓய்வே இராது.

யாரும் பொழுதை வீணாக்கவில்லை. ஏதோ வேலை செய்கிறார்கள். ஆனால் உருப்படியான வேலையில்லை. ஏகப்பட்ட பைல்களைக் காரியாலய நேரம் முடிந்த பின்பும் சிலர் விழுந்து விழுந்து பார்த்து வேலை செய்கிறார்கள்.



திரு பார்க்கின்ஸன்

இவ்வளவு விஷயத்தையும் குறிப்பிட்ட இவர், வேலையைச் சுலபமாகச் செய்யச் சில வழிகளைக் கூறி இவற்றை யாரும் பின்பற்றுவார்கள் என்கிற நம்பிக்கை தமக்கில்லை என்றும் கூறுகிறார்.

அவ்வழிகள் :

1. ஒரு வேலையை நாளை செய்யலாம் என்று ஒத்திப் போடாதே!

2. தான் செய்ய வேண்டிய வேலை அல்ல என்று பிறரிடம் ஒதுக்க முயற்சி செய்யாதே.

3. ஓய்வு கிடைக்கும். அதைத் தக்கபடி பயன்படுத்து.

இம்மூன்று வழிகளையும் கடைப்பிடித்தால் அரசாங்கங்களில் இப்போது வேலை செய்கிறவர்களில் மூன்றில் ஒரு பங்கினர் இருந்தால் போதும் என்பது இவர் கருத்து.

இவர் லண்டனிலிருந்து பம்பாய்க்கு விமானத்தில் வரும்போது இந்தியாவின் நான்காவது ஐந்தாண்டுத் திட்ட நகலைப் படிக்க ஆரம்பித்தார். உடனே ஆனந்தமாகத் தூங்கி விட்டார்! இதை பம்பாயில் செய்த பிரசங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறார் பார்க்கின்ஸன்.

— ஜனன்

# ராமாயணம்

## ராஜாஜி

### 48. லங்கேசன் மதியிழந்தான்!

பஞ்சவடி யுத்தத்திலே அரக்கர் கூட்டத்தில் பிழைத்து ஓடியவர்களில் ஒருவனான அகம்பனன் இலங்கைக்குச் சென்று ராவணன் சந்நிதியில் நின்று, ''ஜன ஸ்தானத்தில் இருந்த நம்முடைய ஜனங்கள் அநேகமாக எல்லோரும் மாய்ந்து போனார்கள். ஜன ஸ்தானம் அழிந்தது. நான் எப்படியோ தப்பி வந்தேன்'' என்றான்.



இதைக் கேட்டதும் ராவணனுக்குப் பெருங்கோபம் பற்றி எரிந்தது. ''யாரடா என் அழகிய ஜன ஸ்தானத்தை அழித்தது? யமனா? அக்கினியா? விஷ்ணுவா? யமனையும் கொல்லுவேன், அக்கினியையும் சூரியனையும் சேர்ந்தாற் போல் எரித்து விடுவேன். வாயுவையும் அசையாது மடக்கி நிறுத்துவேன். நான் இருக்க யார் ஜன ஸ்தானத்தை அழித்து என் ஆட்களைக் கொன்றது? சொல், உடனே'' என்று அடங்காத கோபம் மேலிட்டு ராவணன் எழுந்தான்.

ராக்ஷசேந்திரனுடைய கோபத்தைப் பார்த்துப் பயந்த அகம்பனன், ''அபயம் தந்தால் சொல்லுகிறேன், கேட்டாய்'' என்றான்.

பிறகு அகம்பனன் நடந்த நிகழ்ச்சிகளைச் சொன்னான்: ''தசரத மகாராஜாவின் குமாரன் ராமன் என்கிற வீரன், சிம்மத்தை யொத்த யுவன், பெரும் புகழ் பெற்ற ராஜகுமாரன், மானிடர்களுக்குள் அவனுக்குச் சமானமான பல பராக்கிரமம் பெற்றவர் யாருமில்லை. அவன் பஞ்சவடியில் கரனையும் தூஷணனையும் யுத்தம் செய்து வதம் செய்து விட்டான்'' என்றான்.

ராக்ஷசாதிபதி விஷப் பாம்பைப் போல் சீறி, ''என்ன நீ சொல்லுவது? இந்திரனும் தேவகணங்களும் நீ சொன்ன ராமனுக்குச் சகாயமாக வந்து யுத்தம் செய்தார்களா?'' என்றான்.

''மகாராஜாவே! அப்படி யொன்றுமில்லை. ராமன் ஒருவனே நம்முடைய முழுச் சேனையையும் சேனைத் தலைவர்களையும் கரனையும், தூஷணனையும் கொன்றான். அவன் செலுத்திய பாணங்கள் ஐந்து தலைப் பாம்புகள் போல் அரக்கர்களை ஓட ஓடத் துரத்திக் கொண்டு போய் எங்கிருந்தாலும் தொடர்ந்து போய் அவர்களைக் கொன்றன.'' இவ்வாறு சொல்லி ராம




னுடைய பாணங்களின் வேகத்தையும் அவனுடைய அபார சக்தியையும் விவரித்துச் சொன்னான்.

தசரதன் மகன் ராமன், தம்பி லக்ஷ்மணனுடன் பஞ்சவடியில் இருந்து கொண்டு வேறு உதவியின்றி இந்தக் காரியத்தைச் செய்தான். அவர்களுக்குச் சகாயமாக எந்தத் தேவர்களும் வரவில்லையென்றும் அகம்பனன் சொன்னவுடனே, ''சரி! இப்போதே நான் புறப்படுகிறேன். இந்த இரண்டுமனிதப் பூச்சிகளை நசுக்கி விட்டுத் திரும்புகிறேன்!'' என்று ராவணன் எழுந்தான்.

''வேண்டாம், நில்!'' என்று அகம்பனன் ராவணனை நிறுத்தி ராமனுடைய பல பராக்கிரமத்தை நன்றாக விளக்கினான். விளக்கி விட்டு, ''நான் சொல்வதைக் கேள். இந்த ராமனை யுத்தம் செய்து வெற்றியடைய முடியாது. யாராலும் முடியாது. உன்னாலும் முடியாது. அபயம் தந்தபடியால் இப்படி உண்மையைத் தைரியமாக அரசன் முன்னிலையில் சொல்லத் துணிந்தேன். அவனைக் கொல்லுவதற்கு வழி ஒன்றே. அவனுடைய மனைவி அவனுடன் இருக்கிறாள். உலகத்தில் அவளுக்குச் சமானமான அழகி வேறு இல்லை. அவளை எப்படியாவது நீ தூக்கி வந்து விட்டாயானால், அவளை விட்டுப் பிரிந்து ராமன் உயிர் வைத்திருக்க மாட்டான்; இறந்து போவான். அவள்மேல் அவனுக்கு அபாரமான காதல். அவளைக் காணாமல் பிரிந்தானானால் உயிரை நீப்பான் என்பது நிச்சயம். இதைச் செய்ய வழி தேடுவாய். யுத்தம் வேண்டாம்'' என்றான்.

சீதையின் அழகைப் பற்றிக் கேட்டதும் அரக்கனுக்கு ஆசை வளர்ந்து விட்டது. அகம்பனன் சொன்னதை மிகவும் ருசித்தான். ''நாளைக் காலையில் ரதம் ஏறிப் புறப்பட்டுப் போகிறேன். நீ சொல்லும் யோசனை மிகச் சரியானது'' என்றான்.

*   *   *

அவ்வாறே ராவணன் கோவேறு கழுதைகள் பூட்டிய தன் ரதத்தில் ஏறி ஆகாய மார்க்கமாகச் சென்றான். மேகங்களுக்கிடையில் அந்தத் தங்க மயமான தேரானது, சந்திரனைப்போல் பிரகாசித்தது. நேராக மாரீசன் ஆசிரமத்துக்குச் சென்றான்.

மாரீசன் ராக்ஷஸ அரசனுக்கு எல்லா உபசாரமும் முறைப்படி செய்து விட்டு, ''என்ன விசேஷம், இவ்வளவு அவசரமாக வந்தது?'' என்று விசாரித்தான்.

''பிரிய மாரீசனே! என்னை நீதான் காப்பாற்ற வேண்டும். ஜனஸ்தானம் அழிந்து விட்டது. நம்முடைய சேனை நிர்மூலமாய் விட்டது. இவையெல்லாம் தசரதன் மகன் ராமன் என்பவனுடைய காரியம். அற்புதமாகத்தான் இருக்கிறது! பழி வாங்க அவனுடைய மனைவியை நான் தூக்கிப் போக நிச்சயித்திருக்கிறேன். அதற்கு உன் யோசனையும் உதவியும் வேண்டும்'' என்றான் ராவணன்.

''என்ன வேலையில் இறங்கினாய், ராவணா? எவனோ உன் பகைவன் உனக்குச் சர்வ நாசம் உண்டாக்கச் சிநேகிதனைப் போல் பாசாங்கு செய்து இந்த யோசனையை உனக்குச் சொல்லியிருக்கிறான். ஏமாந்து அழிந்து போகாதே! சீதையை அபகரிக்கும் யோசனையை உனக்கு யார் சொன்னது? அரக்க சமூகத்தின் நாசத்தை விரும்பி யார் உனக்கு இந்தத் துராலோசனையைச் சொன்னது? சும்மா இருக்கும் பாம்பின் வாயில் கைவிட்டு விஷப் பல்லைப் பிடுங்கப் போய்ச் சாகும் யோசனை. திரும்பிப் போய் உன் மனைவிகளுடன் சுகமாக இரு. பைத்தியக்காரன் மாதிரி ராமன் மனைவியை விரும்பாதே! அழிந்து போவாய். ராமனுடைய கோபத்தைத் தூண்டிக் குல நாசம் சம்பாதித்துக் கொள்ளாதே'' என்றான், அறிவாளியும் அனுபவப்பட்டவனுமான மாரீசன்.

மாரீசன் சொன்னதைக் கேட்டுத் தசக்ரீவன் இலங்கைக்குத் திரும்பிப் போனான். மாரீசன் சொன்ன புத்திமதி ராவணன் மூளையில் சரியாகவே புகுந்தது. அந்தச் சமயம் ராவணனுக்குத் தான் பெற்ற வரத்தில் தவறிப் போன விஷயம் தோன்றியிருக்கும். மானிட ஜாதியைப் பற்றித் தான் வரம் பெறவில்லை என்பதையும் ராமனுடைய பாணங்களினால் ஜனஸ்தானத்துச் சேனையும் கரன், திரிசிரன், தூஷணன் முதலிய மிகப் பெரிய வீரர்கள் அனைவரும் தோல்வி அடைந்து மாண்டதையும் நினைத்து, ராவணன் மாரீசன் சொன்னதைச் சரியென்று ஒப்புக்கொண்டதாக நாம் எண்ணலாம்.

விதி இந்த முடிவோடு நிற்கவில்லை. ராவணன் தன்னுடைய சிம்மாசனத்தில் உட்கார்ந்திருந்தான். நெய்விட்டு வளர்த்த அக்கினியைப் போல் அவன் தேஜஸ் ஜொலித்துக் கொண்டிருந்தது. யாராலும் ஜெயிக்க முடியாத வீரன். தேவாசுரர்களோடும், மற்றவர்களோடும் செய்த யுத்தங்களில் சக்ராயுதத்தாலும் யானைகளின் தந்தங்களினாலும் உண்டான காயங்களின் வடுக்கள் அவன் கம்பீரத் தோற்றத்தை இன்னும் அதிக கம்பீரமாகப் பிரகாசிக்கச் செய்தன. ராவணனுடைய பல பராக்கிரமத்துக்கு எல்லையில்லை; அதருமத்துக்கும் எல்லையில்லை. தேவர்களைத் துன்பப்படுத்துவதிலும், யாகங்களைக் கெடுப்பதிலும், பர ஸ்திரீகளைப் பலவந்தம் செய்வதிலும், கோபாவேசமாக இன்னும் பலவித அக்கிரமங்கள் செய்வதிலும் அவனுக்குச் சமானமான துஷ்டன் யாருமே இல்லை. அவனைக் கண்டு தேவாசுர கணங்கள் அளவற்ற பயம் கொண்டிருந்தார்கள். எல்லாப் பிராணிகளையும் வாட்டிக் கதறச் செய்யும் சுபாவம் கொண்டவன். சகலவிதமான செல்வமும் பாக்கியமும் அடைந்து அசகாய சூரனாக விளங்கி இலங்கையை மரண பயமின்றி ஆண்டு வந்தான். பத்துத் தலைகளும் விசாலமான கண்களும் இவற்றுக்கு ஈடாக மற்ற அவயவங்களும் கொண்ட பயங்கர சொரூபத்துடன் எல்லா ராஜலக்ஷணங்களும் அவனிடம் விளங்கின. திவ்விய ஆடை ஆபரணங்கள் அணிந்து மந்திரிகள் சூழச் சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் போது திடீரென்று சபையில் அதிர்ச்சி உண்டாக்கிக் கொண்டு அவனுடைய உடன் பிறந்தவளான சூர்ப்பனகை மூக்கரிந்த அவலக்ஷண சொரூபத்துடன் சபைக்குள் பிரவேசித்தாள்.

(தொடரும்)



அரசுடைமையான
# நாலாயிரம் கோடி நலனைத் தருமா?

பேராசிரியர் சி. எஸ். மகாதேவன்

அவசரச் சட்டத்தின்படி ரூபாய் 50 கோடியோ அதற்கு மேலோ உள்ள 14 வங்கிகளை அரசு தேசியமயமாக்கியுள்ளது. அவ்வங்கிகளின் மொத்தக் கையிருப்புத் தொகை 2700 கோடி. ஸ்டேட் பாங்கையும் சேர்த்துக் கொண்டால் 4000 கோடி ரூபாய் ஆகிறது. சுருங்கக் கூறின் நாட்டின் வர்த்தக வங்கிகளின் மொத்தக் கையிருப்பில் 87 சதவிகிதம் தேசியமயமாக்கப்பட்டுள்ளது! மேலும் 10 சதவிகிதம் வெளிநாட்டு வங்கிகளின் ஆதிக்கத்தில் உள்ளன. எஞ்சிய 3 சதவிகிதம் தேசியமயமாக்கப்படாத 51 சிறு வங்கிகளின் ஆதிக்கத்தில் தேங்கியிருக்கிறது. தேசியமயமாக்கப்பட்டதின் விளைவாக நாட்டின் கையிருப்புப் பணத்தின் பெரும் பகுதியும் அரசின் ஆதிக்கத்திற்குட்பட்டுள்ளது. இவ்வாதிக்கம் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் துணை புரியுமா? துணை புரியாதா? என்பதே முக்கிய பிரச்னை.

மேலும் இத்தகைய ஓர் ஆதிக்கம் ஏற்படும் பொழுது இந்தத் தொகையின் பெரும் பகுதி அரசுத் துறைத் தொழில்களில் முதலீடு செய்யப்படலாம். இந்தியாவில் உள்ள அரசுத் துறைத் தொழில்கள் அனைத்திலும் இதுகாறும் ஏறக்குறைய 4000 கோடி பணம் தேங்கியுள்ளது. இவ்வளவு பெரும் தொகை அரசுத் துறைத் தொழில்களில் முதலீடு செய்யப்பட்டும் குறிப்பிடத்தக்க பயன் எதுவும் பொருளாதார அடிப்படையில் கிடைக்கவில்லை. மாறாகக் கடந்த ஆண்டு மட்டிலும் 35 கோடி ரூபாய் நஷ்டம் ஏற்பட்டுள்ளது. இவ்வண்ணம் இருக்கும்பொழுது வர்த்தக வங்கிகளின் கையிருப்புத் தொகையான 4000 கோடி ரூபாய் அரசின் கையில் சென்று அடைவதினால் நாட்டுக்கு ஏதேனும் நலம் விளையுமா என்று சிந்திப்பது நமது தலையாய கடமை.

இப்பொழுது வங்கிகளைத் தேசியமயமாக்குவதின் நோக்கங்களை ஆராய்வோம்.

(1) வர்த்தக வங்கிகளின் மீது தனிப்பட்ட பெரும் தொழிலதிபர்களுக்குள்ள ஆதிக்கத்தை நீக்குவது.

(2) விவசாயத்துக்கும், சிறு தொழில் வளர்ச்சிக்கும் ஏற்றுமதி முன்னேற்றத்துக்கும் பெருமளவில் கடனுதவி அளிப்பது.

(3) வங்கிகளின் நிர்வாகத்துக்கு வங்கித் தன்மையினையும் சிறந்த தொழில் நுட்பத்தையும் கொடுப்பது.

(4) திறமை மிகுந்த புதிய தொழிலதிபர்களை ஊக்குவிப்பது.

(5) வங்கித் தொழில் புரிவோர்களுக்குத் தேவையான பயிற்சி அளித்து அவர்களை மேலும் திறமையானவர்களாக்குவது.

மேற்குறிப்பிட்டுள்ள நோக்கங்கள் நிறைவேறுமா என்பதைப் பற்றி இனி சிந்திப்போம். பிரதமர் இந்திரா காந்தியிடம் இந்த 14 வங்கிகள் மட்டும் தேசியமயமாக்கப்பட்டதின் நோக்கம் யாது எனக் கேட்டபொழுது, 'அவை சிறப்பாக நிர்வகிக்கப்பட்டு வருகின்றன. மேலும் முதலீடு அதிகமாக உள்ள வங்கிகள் என்ற காரணத்தால் அவை தேசிய மயமாக்கப்பட்டுள்ளன' என்று பதிலளித்தார். இப்பதில் நமக்கு ஒரு பழம் கதையினை நினைவூட்டுவதாக உள்ளது. டேவிட் என்னும் நாடாளும் மன்னன் தனது படைத் தளபதியினை ஒரு நாள் சந்தித்தான். மறுநாள் அவைக்கு வரும்படி கட்டளையிட்டான். மன்னர் கட்டளைக்கு இணங்க அத்தளபதி மன்னரைக் காண விரைந்து சென்றான். மன்னர் அவனைப் பார்த்து "நான் உனது அழகிய மனைவியை எனது மனைவியாக்கிக் கொள்ள விரும்புகிறேன்" என மகிழ்ச்சியோடு கூறினான். அதைக் கேட்டுப்



"இந்த நாட்டில் உள்ள எல்லாப் பெண்களையும் விட உன் மனைவியே சிறந்த அழகி. பண்பிலும் உயர்ந்தவள். அதனால் அவள் தான் எனக்கு வேண்டும்" என்றான் மன்னன்!

பதறிய தளபதி "இச்செயல் கொடிது. உங்கள் எண்ணம் தவறு உடையது" என்றான். மனம் நொந்து, "அரசே, தங்கள் நாட்டில் எத்தனையோ பெண்களிருக்க என் மனைவியை மட்டும் தாங்கள் அடைய வேண்டும் என்று விரும்புவது ஏன்?" எனக் கேட்டான். அதற்கு மன்னன் "இந்நாட்டில் உள்ள எல்லாப் பெண்களை விடவும் உன் மனைவியே சிறந்த அழகி. பண்பிலும் உயர்ந்தவள். சிறந்த பொருளைத்தான் மன்னன் விரும்புவான்" என்று பதில் கூறினான். இதைப் போலத்தான் அமைந்துள்ளது ஸ்ரீமதி இந்திரா காந்தியின் பதிலும்.




மேற்குறிப்பிட்ட நோக்கங்களில் முக்கிய துறைகளுக்குப் பண உதவி அளிப்பதே சிறப்பானது என்று கூறப்பட்டுள்ளது. ஆனால் விவசாயம், சிறு தொழில், ஏற்றுமதி இவை மட்டும் ஒரு நாட்டின் முக்கிய பொருளாதார அம்சங்களாக இருக்க வேண்டியதில்லை. மேலும் நிதி உதவி மட்டுமல்ல. இந்தத் தொழில்களின் முக்கியமான பிரச்னை. விவசாயத்தைப் பார்ப்போமானால், இராசயன உரப் பற்றாக்குறை, பூச்சி மருந்துகளின் பற்றாக்குறை, விவசாயக் கருவிகள் பற்றாக்குறை இவைகளே முக்கியத்துவம் பெறுகின்றன. பணம் மட்டும் இருந்தால் போதாது. மேற்குறிப்பிட்டுள்ள பொருட்கள் இருந்தால் தான் விவசாயம் சிறப்படையும். அதைப் போலவே ஏற்றுமதியும் பல விஷயங்களை அடிப்படையாகக் கொண்டுள்ளது. உள்நாட்டு உற்பத்தி, உற்பத்திச் செலவு, ஏற்றுமதி அளவு, நாணய மாற்று விகிதம், ஏற்றுமதிச் சந்தையில் நம் பொருட்களுக்கு இருக்கும் தேவையின் தரம் இவை முக்கியத்துவம் பெறுகின்றன.

வங்கிகள் கடந்த சில ஆண்டுகளில் விவசாயத்துக்குக் கொடுக்க வேண்டிய கடன் விஷயங்களைச் சரியாகக் கவனிக்கவில்லை என்பது உண்மை. தொழிலுக்குக் கடன் கொடுப்பதற்குத் துணை நின்றது. 1951ல் வங்கிக் கடனில் தொழிலுக்குச் சேர வேண்டிய சத விகிதம் 34லிருந்தது. அது 1967ம் ஆண்டு 65 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. இதிலிருந்து நாம் அறிவது என்னவென்றால், தொழில் துறை ஒரு முக்கியத் துறை என்று கருதப்பட்டது; அதற்கே உதவி அளிக்கப்பட்டிருக்கிறது என்பதேயாகும். இதற்குக் காரணம் என்ன? அரசினரின் கொள்கைகளே. சமீப காலம் வரை அரசினர் விவசாயத்தில் அதிக சிரத்தை கொள்ளாமல் தொழில் துறை வளர்ச்சிக்கே பிரதான்யம் அளித்து வந்தனர். வங்கிகளும் இந்தக் கொள்கையை யொட்டியே தங்கள் பணிகளைச் செய்து வந்தன. விவசாயத் துறையை அலட்சியம் செய்தது மிகத் தவறு என்பதைப் பல அறிஞர்கள் எடுத்துக் காட்டியும் கேளாத அரசு சமீபத்தில்தான் தன் தவற்றை உணர்ந்து திருத்திக் கொண்டது. வங்கிகளுக்கும் விவசாயத்துக்கு அதிக உதவி அளிக்க வேண்டும் என்று ரிஸர்வ் பாங்கி மூலம் உத்தரவிட்டது. இதன்படியே சென்ற ஓரிரண்டு ஆண்டுகளாக விவசாயிகளுக்குக் கடனுதவி அளிப்பதை வங்கிகள் அதிகரித்து வந்துள்ளன.

அடுத்தபடியாகப் பாங்குகளைத் தேசியமயமாக்குவது நம் நாட்டுக்குத் தேவையா என்பதைப் பற்றிச் சற்று சிந்திப்போம். திருவாளர் சந்தானம் அவர்கள் வங்கி தேசியமயமாக்குவது பைத்தியக்காரத்தனம் என்று குறிப்பிட்டுள்ளார். இதனால் பெரும் தீமைகள் விளையும் என்றும் கூறியுள்ளார். முதற்கண் தொழிலும் வியாபாரமும் முடங்கி விடும். அவற்றில் இதுகாறும் முடக்கப்பட்ட பணம் வங்கிகளுக்குப் பெரும் சுமையாக அமையும்.

கடந்த பெப்ருவரி 10ம் நாள் நம் நாட்டின் உயர்நீதி மன்றம் இரண்டு காரணங்களுக்காக இந்தச் சட்டத்தைச் செல்லாது எனத் தீர்ப்பளித்தது.

1. வங்கிகளுக்குக் கொடுக்கப்பட்ட நஷ்டஈடு போதுமானதன்று.

2. வெளி நாட்டு வங்கிகளும், இந்தியாவில் உள்ள மற்ற சிறு வங்கிகளும் இச் சட்டத்தின் கீழ் கொண்டு வரப்படவில்லை. இது ஒரு பட்சபாத நிலையை உருவாக்குகிறது. இதைத் தவிர்ப்பதற்காக அரசு மறுபடியும் ஓர் அவசரச் சட்டம் கொண்டுவந்தது. இதன்படி நஷ்டஈட்டுத் தொகையை 66 கோடியிலிருந்து 87.40 கோடி ரூபாயாக அதிகரித்துள்ளது. இத்தொகை மூன்று தவணைகளாகக் கொடுக்கப்படலாம். அல்லது பத்து வருஷ செக்யூரிட்டிகளாக 4.50 சத விகித வட்டியுடன் கொடுக்கப்படலாம். அல்லது 30 வருட செக்யூரிட்டிகளாக 5.50 சதவிகித வட்டிகளுடன் கொடுக்கப்படலாம். ஆனால் தற்போது வட்டித் தொகை 9 சதவிகிதமாக உயர்ந்துள்ளது. வட்டியை நோக்கும்போது கொடுக்கப்பட்ட நஷ்டஈடு நியாயமென்று கூற முடியாது. இன்னொரு வகையில் பார்க்கும்பொழுது நஷ்டஈடு அதிகமாகத் தெரிகிறது.

அலகாபாத் வங்கியின் நூறு ரூபாய் பங்குகளின் மதிப்பு 260 ரூபாயாக 1969ல் மதிப்பிடப்படுகிறது. அது இப்பொழுது ரூபாய் 327.78 நஷ்டஈடு பெற இருக்கிறது. அது

போலவே சென்ட்ரல் வங்கியின் 25 ரூபாய் பங்கு 1969ல் 52.50 ரூபாய் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. தற்சமயம் அதன் மதிப்பு ரூ. 92.11. அது போலவே பஞ்சாப் நேஷனல் வங்கியின் 10 ரூபாய் பங்கு 24 ரூபாயாகக் கூறப்பட்டது. அது இன்று ரூபாய் 51 நஷ்டஈடு பெறுகிறது. அதிக லாப மடையக்கூடிய பங்கு கனரா வங்கியின் செ ரகங்களே. இவை 198 சதவிகிதம் அதிக மதிப்பினைப் பெறுகின்றன. இவ்வண்ணம், பங்குகளின் மதிப்பு அதிகமாக ஆனதாலும் வங்கிகள் நஷ்டஈடு பெறுவதாலும் கஷ்ட மடைவது பொதுமக்களே. ஏனெனில் இந்த நஷ்டத்தை யெல்லாம் ஈடு கட்ட வங்கிகள் தாம் கொடுக்கக் கூடிய வட்டியைக் குறைக்க வேண்டும். அல்லாமல் கடனுகக் கொடுக்கும் பணத்துக்கு அதிக வட்டி வாங்க வேண்டும். இதற்கெனவே 9½ சதவிகிதம் வட்டி உச்ச வரம்பினை எடுத்து விட்டார்கள். இதன் பின் விளைவாகத் தொழிலகங்களில் உற்பத்திச் செலவு பெருகிவிடும். விலைவாசிகள் கூடும். இப்படி உற்பத்திச் செலவு பெருகிக் கொண்டே போனல் நாட்டின் பொருளாதார வளர்ச்சி பாதிக்கப்படும்.

நடக்கக் கூடாதது நடந்து விட்டது. இவ் வங்கிகள் சரியான முறையில் செயல்பட வேண்டுமானுல் கடனுதவி நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தகுந்தபடி அமைய வேண்டும். அரசுத் துறையில் முதலீடு செய்வதைக் குறைத்து, தரமறிந்து தனியார் துறைக்குக் கடனுதவியைப் பெருமளவில் வழங்க வேண்டும். விவசாயத்தை ஒட்டியுள்ள தொழில்களுக்கு ஏராளமாகப் பண வசதி அளிக்கலாம். எல்லாவற்றையும் விட முக்கியமாக அரசியல்வாதிகளின் தலையீட்டைத் தவிர்க்க வேண்டும். இவ்விதமெல்லாம் நடக்குமா, நாட்டில் சுபிட்சம் பெருகுமா என்றுல் சந்தேகமாகத்தான் இருக்கிறது.

---



# கடல் வெள்ளரிக்காய்

கடற்கரை ஓரங்களில் ஆழம் குறைந்த பகுதிகளில் காணப்படுகின்ற கடல் வெள்ளரியை (Holothurians) உற்றுநோக்கும்போது இது உயிருள்ள பிராணிதானு? மரக்கட்டை போன்று அசையாது இருக்கின்றதே என்று எண்ணத் தோன்றும். கடல் வெள்ளரிகள் பொதுவாகக் கடற்கரை ஓரங்களில் பாறைகளின் ஊடேயும், அடியிலும், சகதியிலும், மணலிலும் சற்றுப் புதைந்து காணப்படும். நீளம் சுமார் ஓர் அங்குலத்திலிருந்து 24 அங்குலம் வரை. சாம்பல் நிறத்துடன் வெள்ளைப்பட்டைகள் குறுக்குவசமாகக் காணப்படும். இக்கடல் வெள்ளரிகள், வெள்ளரிக்காய் போன்று உருவ அமைப்பு கொண்டிருக்கின்றன. இப்பிராணியின் உடல் தடித்த சுருக்கங்கள் நிறைந்த தோலால் போர்த்தப்பட்டிருக்கிறது. இது ரப்பர் போன்று சுருங்கி விரியும் தன்மை கொண்டது. நன்கு ஆராய்ந்தால் ஒழிய இதற்கு வாய், கண்கள், கால்கள் மற்றும் இதர உறுப்புக்கள் எங்கிருக்கின்றன என்று கண்டுபிடிக்க முடியாது.

கடல் வெள்ளரியின் அடிப்பாகத்தில் நீளவாக்கில் வரிசையாக ஐந்து குழாய் போன்ற கால்கள் காணப்படுகின்றன. இவற்றின் உதவியுடன் ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்துக்கு மிக மெதுவாக ஊர்ந்து செல்லுகிறது. இதனுடைய உடம்பின் முன் பாகத்தில் வாயும் அதைச் சுற்றிச் சுமார் முப்பதுவரை சிறு விரல்கள் போன்ற நுண்ணிய உணர்ச்சிக் கருவிகளும் காணப்படுகின்றன. கடல் வெள்ளரி படுத்துக் கொண்டிருக்கும் போது இவ்வுணர்ச்சிக் கருவிகள் கடல் செடிகொடிகள் போன்று வாயின் முன்பக்கம் தள்ளிக் கொண்டிருக்கும். இதைப் பார்த்து ஏமாந்து கடலில் வாழக்கூடிய சிறிய பிராணி அங்கு தங்குவதற்காக வந்து சேரும். இமைக்கும் நேரம்தான். கடல் வெள்ளரியின் உணர்ச்சிக் கருவிகள் அப்பிராணியை வலை போன்று தப்ப விடாமல் சுற்றி வாயினுள் தள்ளி விடும். கடலில் உள்ள மணலிலும், சகதியிலும் இருக்கும் அங்கப் பொருள்களும் (Organic Substances) கடல் வெள்ளரியின் உணவாகும். உணவு சாப்பிடும் போது உணர்ச்சிக் கருவிகளை நீட்டவும், சுருக்கவும் செய்கிறது. கடல் வெள்ளரியின் உணவுக் குழல் சுருண்டு சுருண்டு உடம்பின் முன்பகுதியில் உள்ள வாயிலிருந்து தொடங்கி உடம்பின் கடைசிப் பாகத்தில் முடிவு அடைகிறது. இதே சுவாச உறுப்புகளும் அதனுடைய உடம்பின் பல பாகங்களில் இருந்து தொடங்கி உணவுக் குழாயின் கடைசிப் பாகத்தில் முடிவடைகிறது.

மற்றொரு பிராணி கடல் வெள்ளரியைத் தாக்க வரும்போது அல்லது உண்ண வரும்போது தனக்கு ஆபத்து நெருங்கி விட்டது என்று அறிந்தவுடன் தனது உணவுக் குழலையும், சுவாச உறுப்புக்களையும் மற்றும் உடலின் உள் உறுப்புக்களையும் தன் வாயின் வழியாக வெளியே வீசி எதிரியைச் சுற்றி வலை போல் போட்டு விடுகிறது. இதைச் சற்றும் எதிர்பாராத எதிரி அதிலிருந்து மீளுவதற்கு முன்னுல் கடல்வெள்ளரி தன்னைச் சகதி அல்லது மணலினுள் மறைத்துக் கொள்கிறது. 'உடலின் உள் உறுப்புக்கள் யாவற்றையுமே வெளியே வீசி எறிந்து விட்டதே, இனி எப்படி சுவாச உறுப்பையும், உணவுக் குழலையும் இழந்து கடல் வெள்ளரி உயிர் வாழும்?' என்று எண்ணத் தோன்றும். இத்தகைய செய்கைகளினுல் கடல் வெள்ளரி இறந்து விடுவதில்லை! இழந்துவிட்ட உறுப்புக்கள் யாவற்றையும் சுமார் ஆறு முதல் எட்டு வாரங்களில் உடலினுள்ளே திரும்பப் பெறுகிறது. விபத்து ஏற்பட்டாலும் தன் உடலின் உள் உறுப்புக்களை வெளியேற்றி, திரும்பவும் அவ்வுறுப்புக்களைப் புதிதாக வளர்த்துக் கொண்டு தன் வாழ்க்கையை நடத்துகிறது!

சீன நாட்டினர் கடல் வெள்ளரியைத் தண்ணீர் விட்டு நன்ருக வேக வைத்துச் சாறு எடுத்து மிக விருப்பமாக அருந்துகிருர்கள். இன்றும்கூட இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ள பாம்பன், குருசுத்தீவு போன்ற கடற்கரைகளில் பெருமளவில் இக் கடல் வெள்ளரிகளைச் சேகரித்து வெயிலில் உலர்த்தி, பக்குவப்படுத்தி வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்கிருர்கள்.

— அந்தோனி பேபில்

# ஜெகசிற்பியன்

எழுதும்

# காணக் கிடைக்காத தங்கம்

12.4.1970

புத்தாண்டு மலரில் ஆரம்பமாகிறது



எப்போதும் பக்கத்து வீட்டு ரேடியோவையே கேட்டுக்கிட்டு இருக்காதீங்க, தாத்தா. சொந்தத்துலே வாங்கிக் கேளுங்க. மர்பி மினி-மாஸ்டர் டிரான்ஸிஸ்டர் மிகச் சிறந்தது!

ரூ. 220*

* விலை எக்சைஸ் வரி உட்பட. இதர வரிகள் தனி.

# மர்பி மினி மாஸ்டர்

- அழகிய தோற்றம், இனிமையான ஒலி, அதி நவீன மாடல்.
- உன்னத செயல்திறன் கொண்ட ஏரியல் அமைப்பு. மத்திம மற்றும் சிற்றலைக்காக உட்பொருத்தப்பட்ட இரண்டு தனித்தனி ஏரியல்கள்.
- மைக்ரோ ட்யூனிங்: நிலையங்களைத் தெளிவாகவும் எளிதாகவும் எட்டிப்பிடிக்க.
- எங்குமே எளிதில் கிடைக்கின்ற டார்ச் செல்களில் நான்கே போதும் இதை இயக்க.

இந்த 2-பாண்டு மர்பி மினி-மாஸ்டரின் மதுரமான ஒலியை இன்றே கேட்டுப் பாருங்கள். உடனே அதை வாங்கிக் கொண்டுதான் வருவீர்கள்!

ரேடியோ உற்பத்தித் துறையில் 21 வருட ஆராய்ச்சி, திறமை மற்றும் தொழில்நுட்ப அறிவை பின்பலமாகக் கொண்ட அதி நவீன, இந்தியாவின் மிகப் பெரிய பாக்டரியில் மர்பி டிரான்ஸிஸ்டர்கள் தயாரிக்கப்படுகின்றன.



**மர்பி** இல்லத்தை மகிழ்விக்கிறது!




எஸ். ரங்கநாயகி

## அத்தியாயம் 10

**வா**சுவின் தாயாரே நேராக வந்து விடுவாள் என்று கோசல்ராம் எதிர்பார்க்கவில்லை.

''நான் கேள்விப்பட்டது உண்மையென்று ரமாவைக் கண்டதும் புரிந்தது. இன்னும் என் மகன் வாசுவுக்கு விஷயம் தெரியாது. தயவுசெய்து நீங்கள் மீண்டுமொருமுறை யோசித்துத் தீர்மானியுங்கள். குழந்தைகள் இருவரும் பல காலமாக ஒருவரையொருவர் நேசித்து வருகிறார்கள். உங்கள் முடிவு அவர்களுக்குத் தீங்கு இழைப்பதாகும்.'' தேவகி நேரிடையாக ஆரம்பித்தாள்.

''என்னுடைய முடிவை நான் மாற்றப் போவதில்லை. என் பெண்ணின் நலனுக்காகவே நான் இதைச் செய்கிறேன். பிள்ளையைப் பெற்றவர்களைவிடப் பெண்ணைப் பெற்றவர்களின் கவலைதான் அதிகம். என் மகளுக்கு எது செய்ய வேண்டும் என்பது எனக்குத் தெரியும். நான் செய்திருப்பது முடிவான தீர்மானம்'' என்று கூறிய கோசல்ராம் மேலும் பேச்சுக்கு இடம்கொடுக்க விரும்பாமல் எழுந்து விட்டார். தேவகிக்குக் காலும் ஓடவில்லை; கையும் ஓடவில்லை. எப்படி அவர்கள் வீட்டிலிருந்து புறப்பட்டாளோ, அவளுக்கே வெளிச்சம்!

**"வா**ருங்கள், ஆனந்த்!'' ரூபகுமார் வேண்டா விருப்பாக வரவேற்றான். ''ஆனந்த்! உங்களை இங்கு சந்திப்பேன் என்று நான் எதிர்பார்க்கவில்லை...''

''இங்கே வந்து சந்திக்க வேண்டியிருக்கும் என்று நானும் நினைத்திருக்கவில்லை. ரூபகுமார்! நான் நேரிடையாகவே பேச்சில் இறங்க விரும்புகிறேன்.''

''எனக்கும் அதுதான் விருப்பம்.''

''ரமாவை நீங்கள் விவாகம் செய்து கொள்ளப் போவதாகக் கூறினீர்கள்...''

''ஆமாம்! அப்படித்தான் மாமா கூறினார்.''

''மாமாவைக் கூறும்படி நீங்கள் செய்திருப்பீர்கள் என்பதே என் எண்ணம். ரூபகுமார்! கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள். இந்த வேண்டாத கல்யாணத்தினால் உங்களுக்கு நன்மை ஏற்படாது. வேண்டாத கணவனுடன் ஒரு பெண் இனிதாக வாழ முடியாது.''

''போதும், உங்கள் உபதேசம்!''

''விஷயத்தைத் தெளிவுபடுத்துவது உபதேசமாகாது. நீங்கள் பெண் மனத்துக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும்.''

''இது மணம் இல்லை; மணம்! திருமணம்! பணத்தை உத்தேசித்து என் மாமா செய்யும் முடிவு இது....''

''பணத்தை உத்தேசித்தா?''

''ஆமாம். நானும் அவரும் காகிதப் பேரத்தில் இறங்குவதாகத் திட்டமிட்டிருக்கிறோம். அவருடைய பணம் கம்பெனிப் பங்குகளில் முடங்கிக் கிடக்கிறது. என் உதவியை நாடுகிறார். அதற்காகவே ரமா என் மனைவியாகப் போகிறாள்!'' பரபரவென்று ரூபகுமார் எல்லாவற்றையும் கொட்டி விட்டான்.

''சபாஷ்! உங்கள் பேரப் பேச்சுக்கு ரமா பணயமா? ரூபகுமார்! நீங்கள் படித்தவர்; பெரும் பணக்காரர்..... கொஞ்சம் பண்புடன் இருங்கள்.''

ரூபகுமார் பல்லை நறநற வென்று கடித்தான். அதைக் கண்ட ஆனந்த் அந்த அறையை விட்டு வெளியேறினான்.

தெருவில் நடந்தபொழுது ஆனந்துக்கு ஒரு யோசனை தோன்றியது.

'இப்போது கோசல்ராமுக்கு யாராவது பணம் கொடுத்து விட்டால் இந்தப் பிரச்னை தீர்ந்து விடுமோ? வியாபாரம், பணம் இவை மட்டுமே அவருக்குக் குறியாக இருப்பதால்தானே தம் மனத்தை மாற்றிக் கொண்டு விட்டார்? எனவே...'

அவன் கண்களில் அப்பொழுது பட்டது அந்தப் பாங்கு. தந்தை தன் பேச்சுக்கு மாறு சொல்ல மாட்டார் என்ற நம்பிக்கையோடு அவன் ஒரு முடிவுக்கு வந்துவிட்டான். முடிவெடுத்தபடி தன் எண்ணத்தை அந்தக் கணமே செயலாக்கவும் செய்தான்.

டாக்ஸியில் வந்து இறங்கிய ஆனந்தைப் பார்த்த காந்தி, ''ஓ! நீங்களா?'' என்று மிகுந்த ஆச்சரியத்துடன் கேட்டாள்.

''காந்தி! உன் தந்தை வீட்டில் இருக்கிறாரா? அவரை நான் இப்போதே பார்க்க வேண்டும்'' என்றான் ஆனந்த்.

''ரமாவின் கல்யாண விஷயமாகத்தானே....?''





''நான் சொல்லித் தெரியணுமா?''

காந்தி அவனைத் தன் தந்தையின் அறைக்கு அழைத்துச் சென்றாள். ''அப்பா! இவர் உங்களைப் பார்க்கணுமாம்'' என்று கூறி விட்டு அவள் அங்கிருந்து நகர்ந்து விட்டாள்.

''யார் நீங்கள்?''

'' நான் யார் என்பதைப் பிறகு சொல்கிறேன். உங்களுக்கு இப்போது பணம் தேவைப்படுகிறது என்று கேள்விப்பட்டேன். அதை நான் தருகிறேன்.''

''யார் சொன்னது உங்களுக்கு?''

''உங்கள் மகளின் கல்யாண ஏற்பாட்டிலிருந்து புரிந்து கொண்டேன். ரூபகுமாரும் கூறினார். அதன் உள்ளிட்ட காரணத்தை அறிந்தேன். ரூபகுமார் உங்களுக்குப் பணம் தந்து அதற்கு வட்டியாகவோ பிரதிபலனாகவோ அல்லது மூலதனமாகவோ உங்கள் மகளைக் கேட்கிறார். நான் அப்படியெல்லாம் கேட்கப் போவதில்லை. ஆனால் இவை எல்லாவற்றுக்கும் பிரதியாக ஒரே ஒரு உபகாரம் மட்டும் செய்யுங்கள். ரமாவை வாசுவுக்கே மணம் முடித்து விடுங்கள். நான் வாசுவின் நண்பன் ஆனந்த். நண்பனின் மனத் துயரையே என்னால் சகிக்க முடியவில்லை என்றால் தந்தையான நீங்கள் மகளின் துன்பத்தை எப்படி ஸார் சகிப்பீர்கள்?''

கோசல்ராம் திக்பிரமை பிடித்தவர் போலாகி விட்டார்.

''ஸார்! ரமா உங்கள் அருமை மகள், ஸார். அவள் உங்கள் மடியில் படுத்து, 'அப்பா! அப்பா!' என்று கொஞ்சிய தாயற்ற பெண்! உங்கள் ஆதரவையே நம்பியிருப்பவள்! நீங்களே தள்ளி விட்டால் யாரிடம் அடைக்கலம் புகுவாள்? 'அம்மா' என்று கூப்பிட நினைக்கும்போது அங்கு சூன்யம் கண்டு 'அப்பா' என்று கூப்பிடுகிறாள். அவளை அங்கும் நெருப்பைக் காண வைத்து விடாதீர்கள். பணம் 'அப்பா' என்று கூப்பிடாது; அன்பையும் ஆதரவையும் காட்டாது. பணம் வாய்க்கரிசி போடாது....''

கோசல்ராம் இரு கண்களையும் மூடிக் கொண்டார்.

''உங்கள் வியாபாரத்தைப் பெருக்குங்கள். நான் தடுக்கவில்லை. அதற்காகப் பெண்ணின் வாழ்வைப் பணயமாக வைக்காதீர்கள்.... இப்போதே உங்கள் பெண்ணைப் போய்ப் பாருங்கள். எவ்வளவு தேய்ந்து மாய்ந்து விட்டாள்? இப்படி உருக்குலையவா நீங்கள் இத்தனை நாட்களும் வளர்த்தீர்கள்? பெண்களின் நல்வாழ்வுக்காகவே நீங்கள் மறுமணம்கூடச் செய்து கொள்ளவில்லை..''

கோசல்ராம் நெஞ்சைத் தொட்டுக் கொண்டார்.

ரூபகுமார் ரமாவை அடைய வேண்டும் என்பதற்காகவே இப்படித் திட்டமிட்டிருக்கிறான். ஆனந்தோ நண்பனின் திருமணத்தின்பொருட்டுத் தனது என்றிருக்கும் அனைத்தையும் தந்துவிடத் தயாராக இருக்கிறான். நாமோ பணத்துக்காக மகள் வாழ்வைப் பணயமாக்கி நிறுத்த முற்படுகிறோம்.

புதிதாகப் பணம் சேர்ப்பதற்கு அவர் அப்படிப்பட்ட ஏழையுமில்லை. இருக்கும் பணம் போதுமே! இரண்டு பெண்களுக்கும் கண்டு மீதமிருக்கும். பணத்தை நிறையச் சேர்த்து வைத்தாலும்கூட உள்ளத்தை நோகடித்த பிறகு ரமா அதை நன்றியுடன் ஏற்றுக் கொள்வாளா? ஆனந்த் கூறுவதுபோல் ரமாவின் தாயார் இருந்தால் மகளின் துயரைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பாளா ? அவரோடு இரவும் பகலும் சண்டைக்கு நின்றிருப்பாளே!

''ஸார்! இந்தாருங்கள், கடனுக்கான இந்த அப்ளிகேஷனைப் பிடியுங்கள். உங்களிடமே இருக்கட்டும். உங்களுக்குச் சௌகரியப்பட்டபோது பாங்குக்குப் போவோம். இது போதவில்லையென்றால் எனக்குச் சொந்தத்தில் சிறு வீடு ஒன்று உண்டு. நோயாளியான என் தந்தை இருக்கிறார். அந்த வீட்டையும் வேண்டுமானால் அடமானம் வைத்துத் தருகிறேன். வீடு மூழ்கிப் போனாலும் வாசு தன் வீட்டில் கண்டிப்பாக எனக்கு இடம் கொடுப்பான்....''

அனலிலும் நெருப்பிலும் பண்டங்கள் உருகும். மனமோ கருணையில் உருகும். மனத்தைக் கல்லாக்க முயன்றவர் பனியாக உருகலானார்.

''வேண்டாம் அப்பா ஆனந்த்....இந்தப் பணமில்லாமலேயே ரமாவை வாசுவுக்கு மணம் முடித்து வைக்கிறேன்.''—தளர்ந்து சோர்ந்து கூட்டோடு ஒட்டும் கடைசிக் குரல் போல் கோசல்ராம் கூறினார்.

''உண்மையாகவா, ஸார்? நான் கேட்பது கனவல்லவே! உங்களுக்கு நான் என்ன கைம்மாறு செய்வேன்? நீங்கள் பெரிய மனிதர். உங்களிடம் பணம் நீட்டியது என் சிறுமைத்தனம். ஸார், நீங்கள் என்னைத் தவறாக எடை போடாதீர்கள். வாசு என் உயிர் நண்பன். அவனைக் காப்பாற்றியது என்னைக் காப்பாற்றியது போலாகும்.''

''உணர்ச்சியைக் கொட்டாதே, ஆனந்த்!'' என்ற கோசல்ராம் அவனையும் அழைத்துக் கொண்டு ரமாவின் அறைக்குச் சென்றார்.

கிழித்த நாராகக் கிடந்த ரமாவைப் பார்த்தார். ''ரமா, எழுந்திரும்மா! உன் விருப்பப்படியே வாசுவுடன் உன் திருமணத்தை முடித்து வைக்கிறேன்!''

'யார் இப்படிக் கூறுவது? அப்பாவா?' நிமிர்ந்து பார்த்தாள் ரமா.

''அப்பா!''

''உண்மைதானம்மா! நீ வாசுவையே மணந்து கொள்.''

* * *

போர்டிகோவில் கார் நின்றதைப் பார்த்ததும் ரமா வெளியே வந்தாள். காரிலிருந்து ரூபகுமார் இறங்குவதைக் கண்டதும் அவள் திடுக்கிட்டாள்.

'ஐயோ, இவர் எதற்கு இங்கு வந்திருக்கிறார்? ஆனந்த் எடுத்த முயற்சி காரணமாக அப்பாவின் மனம் மாறியிருக்கிறது. இவர் வந்து அதை மீண்டும் கலைத்து விடுவாரோ?'

''ரமா! உன்னைத்தான் முக்கியமாகச் சந்திக்க வந்தேன்.''

''ரொம்பவும் சந்தோஷம்.''

தன் தோல் பையில் வைத்திருந்த ஹாரங்களை எடுத்தான் ரூபகுமார். ''ரமா! இவை உனக்குப் பிடித்தமாக இருக்கிறதா என்று பார்!'' என்றான்.

ரமா அவற்றை வாங்கி மேஜையின் மீது வைத்தாள். ''ஏழையின் இல்லத்துக்குச் செல்லப் போகிறவளுக்கு இவற்றின் அவசியமே இல்லையே!'' என்றாள்.

''ரமா! நீ இப்படிப் பேசுவது நன்றாக இல்லை. இதைத் திருமணத்துக்கான பரிசாக அளிக்கப் போகிறேன் நான்.''

''ஆனால் இந்த உயர்ந்த பரிசுகளையெல்லாம் வாசு விரும்ப மாட்டாரே!''

''வாசு யாரவன் கேட்பதற்கு? என் மனைவிக்கு நான் தரும் பொருள் இவை.''

''உங்கள் மனைவிக்குக் கொடுக்கும் விஷயத்தில் அவர் தலையிட மாட்டார். ஆனால் நீங்கள் எனக்குப் பரிசளிக்கப் போவதாக அல்லவோ கூறினீர்கள்?''

''ரமா, விளையாடாதே! மாமா உன்னிடம் எல்லாம் கூறியிருப்பார். உனக்கும் எனக்கும்....'' ரூபகுமார் தன் பேச்சை முடிக்கவில்லை; கோசல்ராம் உள்ளே நுழைந்தார். ''ரூபகுமார்! என்னை மன்னித்து விடப்பா! நான் என் எண்ணத்தை மாற்றிக் கொண்டு விட்டேன்!''

''என்ன மாமா, சொல்கிறீர்கள்?''

''ரமாவை வாசுவுக்கே விவாகம் செய்து கொடுப்பதாக நிச்சயம் செய்து விட்டேன். ரமாவின் மனத்தைப் புண்படுத்த நான் விரும்பவில்லை.''

''காகிதப் பேரம் என்ன ஆவது?''

''இருக்கும் தொழிலைச் சரியாகக் கவனித்துக் கொண்டால் அதுவே போதுமானது. புதிய தொழிலில் நான் இறங்க விரும்பவில்லை.''

''நீங்களாகச் சம்பந்தம் கேட்டு வந்தீர்கள்; என்னை அவமானப்படுத்துவது போல் நீங்களாகவே முறிக்கிறீர்கள்!''

ரூபகுமார் மனக் குமைச்சலோடு எழுந்தான். 'விட்டேனா, பார்!' என்று கறுவுவதுபோல் வெளியே நடந்தான்.

''அப்பா! ரூபகுமார் எப்படி ஆட்டம் காட்டி விட்டுச் செல்கிறார், பார்த்தீர்களா?'' என்றாள் ரமா.

''இதில் என்னம்மா அதிசயம்? ரூபகுமாரோடு உன் விவாகம் முடிந்திருந்தால் வாசுவும் இப்படித்தான் ஆட்டம் காட்டியிருப்பான்!'' என்று கூறிய கோசல்ராம் அப்புறம் அங்கு நிற்கவில்லை.

ரமா தந்தையையே அதிசயத்துடன் நோக்கியபடி நின்றிருந்தாள்.

* * *

அன்று ஆனந்தின் மனத்தில் ஒரே ஆனந்தம். தான் முன்னின்று, திருப்

பத்தில் இருந்த வாசு ரமாவின் விவாகத்தை மீண்டும் நேர்ப் பாதையில் கொண்டு வந்து விட்ட மகிழ்ச்சியில் 'இனி வாசுவின் விவாகத்தைத் தள்ளிப் போடக் கூடாது. சீக்கிரத்தில் நிறைவேற்றும் வழியைப் பார்க்க வேண்டும்!' என்று தீர்மானித்தான்.

''வாருங்கள், ஸார்!'' சீதாபதி யாரையோ வரவேற்பதைச் செவியுற்று ஆனந்த் திரும்பிப் பார்த்தான். ஸ்ரீகாந்த் நின்று கொண்டிருந்தார்.

''இன்று ஒரு கடிதம் வந்திருக்கிறது.''

தம் தோல் பையிலிருந்து ஸ்ரீகாந்த் ஒரு கடிதத்தை எடுத்து ஆனந்திடம் நீட்டினார்.

ஆனந்த் பரபரப்புடன் அதைப் பிரித்துப் பார்த்தான். படிக்கப் படிக்கத் திகைப்பு, வியப்பு, ஆச்சரியம்! இப்படியும் இருக்குமா? ''ஸார்! இது உண்மைதானா?'' என்று உணர்ச்சி மிதப்பில் கேட்டான் ஆனந்த்.

''நீ இப்படி ஒரு கேள்வி போடுவாய் என்று தெரியும். அதனால்தான் கடிதத்தையே நேரில் எடுத்து வந்தேன்'' என்றார் ஸ்ரீகாந்த்.

''என்ன விஷயம்?'' விவரம் விளங்காமல் கேட்டார் சீதாபதி.

ஆனந்த் தந்தையை நோக்கினான். அவர் விஷயத்தை அறியும் ஆவலில் ஸ்ரீகாந்தைப் பார்த்தார்.

''அப்பா! சர்வதேசக் கலைக் கழகத்தார் பிரான்ஸில் ஒரு கலை நிகழ்ச்சி ஏற்படுத்தி இருந்ததாகச் சொன்னேனல்லவா...பேப்பரில்கூடப் படித்தோமே?''

''ஆமாம்.... அதில் நல்ல சித்திரத்துக்குப்பரிசும் வழங்கப்படும் என்று இருந்தது. உன்னைக்கூட அனுப்பச் சொன்னேன். உனக்குத்தான் விருப்பமில்லை.''

''அந்த அனைத்துலக ஓவியப் போட்டியில் என் சித்திரம் முதல் இடம் பெற்று முதற் பரிசும் பெற்றிருக்கிறது.''

''நீ அனுப்பியதாக எனக்கு நினைவில்லையே!''

''நான் அனுப்பவில்லை அப்பா. இவர் அனுப்பியிருக்க வேண்டும்.'' ஸ்ரீகாந்தைச் சுட்டிக்காட்டினான் ஆனந்த்.

''ஆமாம், இருவரையும் கலக்காமல் நான்தான் அனுப்பினேன், 'தாயும் சேயும்' படத்தை. முதன் முதலாக என்னைக் கவர்ந்த சித்திரம் அது. அனைத்துலகையும் கவர்ந்து விட்டது. பரிசை நேரில் சென்றுதான் பெற வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர்களே செய்கிறார்கள். போக்குவரத்துச்

## மேடை ஏறிய மாதங்கி



சமீபத்தில் நிகழ்ந்த குமாரி மாதங்கியின் பரத நாட்டிய அரங்கேற்றம் இரண்டு வகையில் குறிப்பிடத்தக்கது. திரு வி. கே. ராமஸ்வாமி முதலியாரின் பேத்தி குமாரி மாதங்கி பாலசரஸ்வதி நடனப் பள்ளியில் நடனம் பயின்றவள். ஆகவே ஜதிகளும் நடைகளும் அடவுகளும் அப்பழுக்கின்றிச் சுத்தமாக இருக்கும் என்று எதிர்பார்க்கலாம். அவ்விதமே இருந்தன என்பதைக் கண்டோர் திருப்தியுடன் பாராட்டினார்கள். ஜதிஸ்வரம், சப்தம், வர்ணம் எல்லாமே கச்சிதமாக இருந்தன. சங்கராபரண வர்ணத்துக்கு ஆடிய நிருத்தியங்களும் காபி ராக தில்லானாவும் ரம்யமாக இருந்தன. இரண்டாவதாக அபிநயப் பகுதியில் பாலசரஸ்வதி ஆடி அபிநயித்து மெருகு ஏற்றியுள்ள தெருவில் வாராளோ, எந்தைக் கண்டு, அதுவும் சொல்லுவள், நேற்றந்தி நேரத்திலே, மற்றும் இவை போன்ற உருப்படிகள் சேர்க்கப்பட்டிருந்ததுடன், அபிநயங்களும் ரசிக்கும் வகையில் இருந்தன. தியாகய்யர் கிருதிகளின் சங்கதிகளைப் பாடகர் திறமைக்கேற்ப, பூராவாகவோ, ஒன்று இரண்டை விட்டுவிட்டோ பாடுவது போல் இந்தப் பதங்களுக்கும் ஜாவளிகளுக்கும் பதினொரு வயதுச் சிறுமி கஷ்டமாகச் செய்து காட்டக்கூடிய அபிநய பாவங்களை மட்டும் சொல்லி வைத்துப் பார்ப்பவருக்கு ரசபங்கம் ஏற்படாத வகையில் அவற்றை அபிநயித்து வின்யசிக்கப் பயிலுவித்த ஆசிரியையின் தனித் திறமையைப் பாராட்ட வேண்டும். ஸ்ரீமதி பாலசரஸ்வதியும் குமாரி லக்ஷ்மியும் குமாரி மாதங்கியின் அபிநயங்களுக்குப் பதம் பாடியதை விசேஷமாக இங்கே சொல்ல வேண்டும். அரங்கேற்றத்தின் தன்மை இதனால் உயர்வடைந்தது என்று சொல்லத் தேவை இல்லை. குமாரி மாதங்கியின் நடனச் சிறப்பு மேன் மேலும் ஸ்ரீமதி பாலசரஸ்வதியின் மேற்பார்வையில் அபிவிருத்தி அடையும் என்று எதிர்பார்க்கலாம்.

நியூ சௌத் வேல்ஸில் ஒரு ராணுவ மேஜர் தமது 'வாட்டர் புரூப்' கைக்கடிகாரத்தைச் சமுத்திரத்தில் நழுவ விட்டுவிட்டார். இரண்டு மாதங்களுக்குப் பிறகு ஒரு செம்படவர் மீன் பிடிக்கும் போது முப்பதடி ஆழத்திலிருந்த அந்தக் கடிகாரம் அவரது தூண்டிலில் சிக்கிக்கொண்டுவிட்டது. என்ன அதிசயம்! அந்தக் கடிகாரம் அப்போதும் ஓடிக் கொண்டிருந்தது! சாவி கொடுக்காமல் தானாக இயங்கும் அந்தக் கடிகாரம் அலைகளால் அலைப்புண்டதால் நிற்காமல் ஓடிக் கொண்டிருந்தது.

தகவல்: ஜெயந்தி - ஆதாரம்: காரவன்

---

செலவும் அவர்களுடையது. ஆனந்த் சீக்கிரமே புறப்பட வேண்டியிருக்கும்'' என்றார் ஸ்ரீ காந்த்.

''பேஷாகப் போய் வரட்டுமே!'' சீதாபதி சம்மதம் அளித்து விட்டார்.

ஆனால் ஆனந்த்.....?

ஆனந்த் யோசனையில் ஆழ்ந்துவிட்டான். அதே சமயம் வாசுவும் ரமாவும் உள்ளே நுழைந்தனர்.

''வாசு! உனக்கு ஒரு நல்ல செய்தி. ஆனந்த் தீட்டிய சித்திரத்துக்கு அனைத்துலக முதற் பரிசு கிடைத்திருக்கிறது!'' வாசுவைப் பார்த்ததும் ஸ்ரீகாந்த் குதூகலமாகக் கூறினார்.

''அப்படியா? மிஸ்டர் ஆனந்த்! உங்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள்!'' என்றாள் ரமா மகிழ்ச்சியோடு.

''ஏண்டா, ஆனந்த்! உனக்கு மூளை இருக்காடா? முதற் பரிசு வாங்கியிருப்பவன் இப்படியா உட்கார்ந்திருப்பான்?''

''அதற்கில்லை, வாசு! பரிசை நேரிலேயே பெற்றுக்கொள்ளவேண்டுமாம்.''

''ரொம்ப நல்லதாப் போச்சு!''

''உன் விவாகத்தைக் கண்ணால் கண்டு குளிர்ச்சியடைந்த பிறகுதான் கிளம்ப வேண்டும் என்றிருந்தேன்..... ஆனால் அதற்குள்ளேயே பயணம் கிட்டிவிடும் போலிருக்கிறது.''

''என்னது? அதற்குள் பயணமா?'' என்று கூவின வாசு ஸ்ரீகாந்தின் பக்கம் திரும்பி, ''என்ன ஸார் இது. இப்படி ஒரு வெடி குண்டைத் தூக்கிப் போடுகிறானே!'' என்றான்.

''ஆமாம். பத்து நாட்களில் புறப்பட வேண்டியிருக்கும் என்றார் ஸ்ரீகாந்த்.''

''பத்து நாட்கள் இடைவெளி இருக்கிறதோ, இல்லையோ?'' என்ற வாசு ரமாவை நோக்கி ''ரமா! நீ இன்றே அப்பாவிடம் பத்து நாட்களுக்குள் ஒரு நாள் பார்க்கச் சொல்லிவிடு. ஆடம்பரமாக இல்லாவிட்டாலும் பாதகமில்லை. அப்புறமென்றால் ஆனந்த் திரும்பிய பிறகுதான் தேதி வைத்துக் கொள்ள வேண்டும்!'' என்றான்.

''நோ! நோ! நான் திரும்பும்வரை தள்ளிப் போடக் கூடாது. இந்த விவாகம் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரம் நடந்தாகவேண்டும்'' என்று ஆனந்த் அழுத்தம் திருத்தமாகக் கூறினான்.

''நீ ஏம்பா இப்படிப் பயப்படுகிறாய்? இந்த ரமா எங்கே போய்விடப் போகிறாள்? நான்தான் எங்கே போகப் போகிறேன்?'' என்றான் வாசு.

ஆனந்தும் ரமாவும் ஒருவரை யொருவர் நோக்கினர். நடுவில் குறுக்கிட்ட விக்கினங்களை வாசு அறியவில்லை என்பதில் அவர்களுக்கு ஒரு திருப்தி.

''நான் அப்பாவிடம் சொல்லிப் பார்க்கிறேன்'' என்றாள் ரமா.

''எனக்காகத் துரிதப்படுத்த வேண்டாம். அப்பாவின் சௌகரியப்படி செய்யட்டும்!'' என்றான் ஆனந்த்.

ரமா வீட்டுக்கு வந்தபோது காந்தி கோசல்ராமிடம், ''அப்பா! உங்கள் துணிமணிகளை யெல்லாம் எடுத்து வைத்து விட்டேன். தொழில் சம்பந்தப்பட்ட காகிதங்களை நீங்களேதான் எடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்'' என்று கூறிக் கொண்டிருந்தாள்.

''நல்லதம்மா! நான் ஊர் திரும்பக் குறைந்தது பதினைந்து நாட்கள் பிடிக்கும். வந்தவுடன் ரமாவின் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டியதுதான்!'' என்று மறுமொழி அளித்துக் கொண்டிருந்தார் கோசல்ராம்.

* * *

ரூபகுமார் குறுக்கும் நெடுக்குமாகத் தன் அறையில் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தான். தோல்வியைத் தவிர்க்க மனம் என்னவெல்லாமோ பிடிபடாத திட்டங்கள் போட்டது. அலுத்துச் சலித்துப் போய் அவன் காரை எடுத்துக் கொண்டு புறப்பட்டான். தன் போக்கில் சென்றுகொண்டிருந்த கார், வாசுவின் ஆபீசுக்குள் நுழைந்தது. அவனுக்குத் தன் இந்தச் செய்கை பைத்தியக்காரச் செயலாகப் பட்டது.

ரூபகுமார் உள்ளே நுழையும்போது பியூன் அருணாசலம் பரபரப்போடு வாசல் பக்கம் ஓடி வந்து கொண்டிருந்தான்.

ரூபகுமாரைப் பார்த்துச் சடக்கென்று நின்றான்.

''ஸார், கேட்டீங்களா, வாசு ஐயா இருக்காங்களே, அவங்க ஆக்ஸிடெண்டிலே சிக்கி நெனைவில்லாம கிடக்கிறாங்களாம். ஒரு பொண்ணு இப்பத்தான் போன் செய்தது. அவங்க வீட்டுக்குச் செய்தி சொல்லணுமாம்'' என்றான்.

(தொடரும்)

ரகுபதி ராகவ

# மகாத்மா காந்தி

தமிழாக்கம்: ராஜாஜி

## 21

சத்தியம், உண்மை என்று சொல்லிக் கொண்டு அடக்கம் இல்லாமல் போனால் கர்வத்திலும் அகம்பாவத்திலுமே முடியும். உண்மையை அடக்கத்தோடு கடைப்பிடித்தால்தான் வாழ்க்கை அழகு பெறும். இல்லாவிடில் நல்ல சித்திரத்துக்கும் குறும்புச் சித்திரத்துக்கும் உள்ள பேதத்தைப் போலவே ஆகும்.

உண்மையைக் கடைப்பிடித்து வாழ்க்கை நடத்துவது மிகக் கடினம். இது முயன்று பார்ப்பவர்களுக்கு நன்றாகத் தெரியும். சத்திய மார்க்கத்தில் முயல்கிறவன் வெற்றி பெறும்போது மக்கள் அவனைப் பாராட்டுகிறார்கள். தோல்வி யடைந்து தவறியபோது உலகத்துக்கு அது தெரிவதில்லை. ஆனால் அவனுக்கு நன்றாகத் தெரியும். தோல்வியைக் கண்ட மெய்த் தொண்டன் அந்தத் தோல்வியினால் தண்டனை அடைந்து சுத்த நிலை பெறுவான். அடக்கமும் பெறுவான்.

உயிர் கொண்ட ஜீவன்கள் அனைத்துக்கும் அன்பு செலுத்த வேண்டும் என்று விரும்பும் ஒருவன், 'உனக்கு நான் பகைவன்' என்று சொல்லுகிறவனிடத்திலும் அன்பு செலுத்த விரும்புவான். இதை ஒருவன் தன் சக்தியைக் கொண்டே செய்ய முடியுமா? முடியாது. ஆண்டவனைப் பிரார்த்தித்துச் சக்தி அடைந்தால்தான் முடியும். தன்னை ஒரு தூசியாக நினைத்துப் பிரார்த்திக்க வேண்டும். அருள் மார்க்கத்தில் அடக்கம் தானாக வளரும். தன்னைத் தூசியாகப் பாவித்துக் கொண்டு சூன்யமாக ஆகி விட்டால்தான் ஆண்டவனை நேருக்கு நேர் காண முடியும். இல்லாவிடில் ஆண்டவனைக் காண இயலாது.

'வெற்றி பெற்றேன்' என்று யாரே தன்னைத் தான் பாராட்டிச் சொல்லிக் கொள்ள முடியும்? நமக்குள் கோயில் கொண்டிருக்கும் ஆண்டவன் அல்லவோ வெற்றி பெற்றது. நாமல்ல. சத்தியாக்கிரக யுத்தத்தில் பொறுத்துக் கொள்ள வேண்டிய நஷ்டங்களைக் கண்டு சிலர் திகைக்கிறார்கள். ஆயுதங்கள் கொண்டு நடத்திய மகா யுத்தத்தில் வெற்றி



பெறுவதற்கு முன் எத்தனை லட்சக் கணக்கில் மக்கள் மாண்டார்கள். அந்த யுத்தத்தைவிடப் பெரியதல்லவா ஆன்ம யுத்தம். ஆன்ம சக்தியைக் கொண்டு நடத்தும் யுத்தத்தில் பலபேர் உயிர் இழப்பது என்ன வியப்பு? பலர் மாண்டால்தான் சத்தியத்துக்கு முழுச் சான்றாக ஒருவனாவது நிற்க முடியும்.

(யங் இந்தியா 25-6-25)

## அத்தியாயம் 32

# நாலு நாள் அவகாசம்

தன்னுடைய பிரத்தியேக 'பாக்ஸ்'க்குப் போகச் சாருலதா 'லிஃப்'டை நெருங்கியபோது அவளைப் பார்த்து விட்ட கிருஷ்ணசாமி அவசரம் அவசரமாகக் கிட்டத்தில் வந்தான். "உன்னுடைய ஃபோர்காஸ்ட் என்ன, ராணி அம்மா கோப்பைக்கு?"

"ஒன்பது" என்றாள் அவள்.

"லட்ச ரூபாய் கொடுத்து வாங்கிய குதிரை ஓடுகிறதே?"

"அப்போ அதன் பேரிலேயே கட்டுங்கள்; என்னைக் கேட்பானேன்?"

"நீ கொடுக்கிற டிப்ஸ் ஐந்துக்கு மூன்று பழுதில்லாமல் பலிக்கிறதே, அதனால்தான்."

" சொன்னால் நம்ப மாட்டீர்கள். நான் நியூமராலஜி பிரகாரம் குதிரைகளைத் தேர்ந்தெடுக்கிறேன். அஸ்ட்ராலஜியை விட அதிகப் பலன் தருகிறது!"

"அஸ்ட்ராலஜி பார்த்து அரசியலில் நிலைக்க நினைப்பவர்களைப் பின்பற்றுவதானால் ஒன்னும் நம்பர் குதிரை மேல்தான் கட்ட வேண்டும்."

சாருலதா சிரித்தாள். "யங்டர்க்கைச் சொல்கிறீர்களா? மண்ணைக் கவ்வப் போகிறது ஜாக்கிரதை!" என்று கூறியபடியே லிஃப்டில் நுழைந்தாள்.

மாடிக்கு வந்ததும் வராந்தாவில் நின்று எந்தெந்தக் குதிரைக்கு எந்த அளவுக்கு மெர்க்குரி ஏறி இருக்கிறதென்று சில விநாடிகள் ஆராய்ந்தாள். அப்போது அங்கு வந்த பணியாளிடம் டிபன் காப்பிக்கு ஆர்டர் செய்து முடிப்பதற்குள் குதிரைப் பந்தயம் ஆரம்பமாகிவிட்டது. பைனகுலர்ஸைக் கண்களுக்கு உயர்த்தி நோக்கினாள் சாருலதா. அவள் ஊகம் பொய்க்கவில்லை. 9ம் நம்பர் குதிரை பென்ட்ரகன் முதலாவதாக வந்தது.

"ஐ ஆம் ஸோ எக்ஸைட்டட்" என்றாள் அவள் அன்டோனியைப் பார்த்து. "நாலு ஜாக்பாக்ட் டிக்கட்டுகள்தான் வாங்கினேன். இரண்டு இதுவரை பிழைத்திருக்கிறது."

"யூ வில் மேக் இட்" என்றான் அவன்.

"ட்ரிபிள் ஈவென்டுக்கு யாரையாவது அனுப்பி ஒரு சீட்டு வாங்கிவர ஏற்பாடு பண்ணுங்கள். உங்கள் மூலமாகப் போனால் அதிர்ஷ்டம் அடிக்கிறதா, பார்ப்போம்."

"நெம்பர்களைச் சொல்லுங்கள்."

சாருலதா கூறினாள்.

"ஜெயித்தால் ஐம்பது சத விகிதம் எனக்கு."

"எண்பதோ நூறோ கொடுக்கப் போகிறேன். அதில் பங்கு வேறேயா?"

ஐந்தாவது ரேஸ் முடிந்ததும் ஜாக்பாட்டில் ஜெயிக்கக் கூடியவர்களின் எண்ணிக்கை இரண்டு இலக்கத்துக்கு வந்து விட்டது.

"சாரு! நீ என்னுடன் வரப்போகிறாயா இல்லையா?" பொறுமை இழந்து கேட்டான் வேணுகோபால்.

"ஐந்து ரேஸ் முடிந்தும் என் ஜாக்பாட் டிக்கட்டுக்கு உயிர் இருக்கிறது. ட்ரிபிள் ஈவென்டில் ஃபர்ஸ்ட்



சாருலதா

கி.ராஜேந்திரன்

லெக்கில் ஜெயித்திருக்கிறேன். அடுத்த ரேஸில் என் சொந்தக் குதிரை ஓடுகிறது. இத்தனைக்கிடையில் என்னை இங்கிருந்து கிளம்பச் சொல்வது நியாயமா?"

"டாம் தி ஜாக்பாட்!" என்று உரக்கவே கத்தி விட்டான் வேணுகோபால் கோபத்துடன். பத்துத் தலைகள் திரும்பிப் பார்த்தன.

வேணுகோபாலின் கண்கள் சிவந்திருப்பதையும், அவன் விரல்களைச் சொடுக்குவதையும் பார்த்த சாருலதா அதற்கு மேல் தான் அங்கு தாமதித்தால் நிலைமை ரசாபாசமாகப் போய் விடுமோ என்று பயந்தாள். "அன்டோனி! ரிஸல்ட்களை ஃபோனில் எனக்குச் சொல்லுங்கள். நான் அவசரமாகப்

போக வேண்டியிருக்கிறது. ஜெயித்தாலும் பணத்தை நாளைக்கு வந்துதான் வாங்கிக் கொள்ள வேண்டும்'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள்.

காரில் போகும்போது, ''வேணு! ரொம்ப 'எம்பாரஸ்' பண்ணி விட்டீர்களே என்னை'' என்று குற்றம் சாட்டினாள் சாருலதா.

''எனக்கு இந்த ரேஸ்கோர்ஸுக்குள் நுழைவதே ஒரு சங்கடமான காரியமாக இருந்ததே. முக்கியமான விஷயமாக உன்னிடம் பேச வேண்டும் என்றுதானே அதைப் பொருட்படுத்தாமல் வந்தேன்?''

''அப்படி என்ன தலை போகிற காரியம்?''

''அதை இப்போ சொல்ல மாட்டேன். நேரே போல்ஸ்டார் ரெஸ்டாரண்டுக்குப் போய் ஒரு மூலையில் அடக்கமாக உட்கார்ந்து கொண்டு இரண்டு பீச்மெல்பாவுக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு அப்புறம் நிதானமாகப் பேச வேண்டும்.''

''இது நியாயமே இல்லை. அவசரம் அவசரம் என்று ஆவலைத் தூண்டினீர்கள். இப்போ நிதானம், அமைதி என்று நேரத்தைக் கடத்துகிறீர்கள்.''

''அடக்கமாட்டாத ஆர்வத்துடன் நீ இருக்கிறாய் என்றால் இப்போதே கூறி விடுகிறேன்.''

''பிளீஸ் வேணு! இது என்ன விளையாட்டு, பச்சைக் குழந்தை போல?''

''ஆல் ரைட். சொல்லட்டுமா ? அம்மா சம்மதமளித்து விட்டாள்.''

''சம்மதித்து விட்டாளா? எதற்கு?''

''புடலங்காய்க் கறி பண்ண! கேள்வியைப் பார்!''

''வேணு, எனக்குப் புரியவில்லை.''

''நம் கல்யாணத்துக்குச் சம்மதித்து விட்டாள் சாரு! வீ வில் பி மான் அண்ட் ஒய்ஃப்!''

சாருலதா மௌனமானாள்.

''என்ன யோசனை?''

''யோசிக்க வேண்டிய விஷயம் அதனால் யோசிக்கிறேன். உங்கள் அம்மாவிடம் என்னைப் பற்றிய முழு விவரங்களையும் சொன்னீர்களா?''

''இல்லை, சாரு. ஒரு விதவையை நான் மணந்து கொள்ளப் போகிறேன் என்ற விஷயத்தை மட்டும்தான் சொன்னேன்.''

''இதை வேறு யாரிடமும் சொல்வதில்லை என்று வாக்களித்திருந்தீர்களே?''

''என் தாயாரை நான் வேறு யாரோ என்று கருத முடியுமா சாரு? அவளை ஏமாற்ற எனக்கு மனம் வராது. திருமணம் என்பது நம் இருவரையும் மட்டும் பொறுத்த விஷயம்தான். ஆனால் பெற்றோரின் மனப்பூர்வமான ஆசிகளையும் பெற்றால் நமக்கு நல்லதுதானே?''

''காந்தீயம் பற்றி வாய் கிழியப் பேசும் நீங்கள் சத்தியத்தை மீறியிருக்கக்கூடாது.''

''சாரு! நான் சத்தியத்தைப் பற்றி நிறையப் பேசுகிறேனே ஒழிய காந்தியாகவே மாறிவிடவில்லை. காந்தீயத்தைக் கடைப்பிடிக்க முயலும் சாதாரண மனிதன் நான். குற்றங் குறைகள் உள்ளவன். தவறுகள் செய்து விட்டுக் கையைப் பிசைகிறவன். வெற்றிகளைக் கண்டு அளவுக்கு மீறிய ஆனந்தத்தில் ஆழ்ந்து போகிறவன். இப்போது நான் ஒரே குதூகலமாக இருக்கிறேன். அந்த 'மூடை'க் கெடுக்காதே நீ!''

''உங்கள் சந்தோஷத்தை என்னால் பகிர்ந்து கொள்ள முடியவில்லை; ஐ ஆம் ஸாரி.''

''ஸாரி சொல்லித் தப்பித்துக் கொள்ள முடியாது. நீயும் சந்தோஷப் பட்டுத்தான் ஆக வேண்டும். இல்லாவிட்டால் உன்னை விட மாட்டேன்.''

பிரபலமானதும், அலங்காரமானதும் தரமானதுமான 'போல்ஸ்டார்' ரெஸ்டாரண்டுக்குள் இருவரும் சென்று அமர்ந்தார்கள். பீச்மெல்பாவுக்கு ஆர்டர் கொடுத்தான் வேணுகோபால். சாருலதா எதிரேயிருந்த கண்ணாடி டம்ளரை எடுத்து ஒரு வாய் நீர் பருகினாள். ''என்ன சொன்னாள் உங்கள் அம்மா?''

''மனப்பூர்வமாகச் சம்மதம் தெரிவித்து விட்டாள், சாரு! என்னுடைய சந்தோஷம்தான் அவளுடைய வாழ்க்கை. 'இந்தத் திருமணம் உனக்கு மகிழ்ச்சியைத் தரக்கூடும் என்றால் குறுக்கே நிற்க மாட்டேன்' என்றாள். மருமகளை அன்புடன் வரவேற்கக் காத்திருக்கிறாள்.''

''இருக்கலாம். ஆனால் இந்தக் கல்யாணத்துக்கு நான் சம்மதம் அளிக்கும் முன்னர்

உங்கள் அம்மாவிடம் நீங்கள் அனுமதி பெற்று வந்தது விசித்திரம்!''

'' ஆரம்பித்து விட்டாயா மறுபடியும்?''

''புதிதாக எதை ஆரம்பித்தேன்? என்றைக்கோ தொடங்கிய ஆட்சேபணைகள் இன்னும் தொடர்கிறது.''

''எந்த விதமாகப் பார்த்தாலும் திருமணம் தான் நம் இருவருக்கும் ஏற்ற நல்ல முடிவு. முதலாவதாக...''

''நீங்கள் திருமணம் நல்ல முடிவு என்பதற்காக எட்டுக் காரணங்களை அடுக்கினால், நான் அது நல்லதல்ல என்பதற்குப் பத்துக் காரணங்களைச் சொல்ல முடியும்.''

பீச்மெல்பாக்கள் வந்தன.

''சொல்லு, கேட்கிறேன். உன்னை இன்று வாதத்தில் வெல்லாமல் விடப்போவதில்லை நான்.''

''வாதத்தில் வெல்பவன் நல்ல அரசியல் வாதி



யாகலாம் அல்லது வக்கீலாகலாம்.''

''ஆனால் நல்ல குடும்பத் தலைவனாக முடியாது. உண்மை. சாரு! உன் மனத்தை நான் ஏற்கெனவே வென்றுவிட்டதென்றும் வாதத்தில் உன் அறிவை வெல்ல வேண்டியதுதான் பாக்கி என்றும் நினைத்துக் கொண்டிருக்கிறேன். நான் அப்படி எண்ணுவது தவறு?''



''பயில்வான் காங்கிடம் மல்யுத்தப் பயிற்சி பெற்று விட்டேன். இனி நான் பாராளுமன்றத்தில் யாருக்கும் பயப்படாமல் தைரியமாகப் பேசுவேன்!''



''நூல் கண்டு வாங்கிட்டு வந்திருக்கிறீர்களே! எதற்கு?''

''ஓட்டலில் காராசேவு பொட்டலம் நூறு வாங்கினேன். வழியில் தின்றது போக பாக்கி இதுதான்!''

சாருலதா விசும்பி விசும்பி அழ ஆரம்பித்து விட்டாள். அந்த நேரத்தில் உணவு விடுதியில் அதிகக் கூட்டம் இல்லை. என்றாலும் அவளுக்கு வெட்கமாக இருந்தது. அழுகையை அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை. தவித்துப் போனாள்.

அவளுடைய அந்த நெகிழ்ந்த மனநிலையைத் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டு பேசினான் வேணுகோபால். ''கல்யாணம் உனக்குள்ள பல பிரச்னைகளையும் தீர்த்து வைக்கும் சாரு. உன்னைப் பிளாக்மெயில் செய்கிறார்களே இரு தடியன்கள், அவர்கள் வாலைச் சுருட்டிக் கொண்டு ஓடி விடுவார்கள். நீ ஒரு விதவை என்பதை வெளியில் சொல்லி விடுவதாகத்தானே பயமுறுத்துகிறார்கள்?''

''அவர்கள் மன்சுக்லாலுக்குத் தூரத்து உறவினர்கள். ரொம்ப நாட்களுக்குப் பிறகு அவரைப் பார்க்க அலகாபாத்துக்கு வந்திருக்கிறார்கள். வீடு கைமாறியிருப்பதைக் கண்டதும் விசாரித்திருக்கிறார்கள். மன்சுக்லால் காலமாகி விட்டாரென்றும் அதன்பின் நான் சொத்துக்களையெல்லாம் விற்றுவிட்டு ரொக்கத்துடன் கிளம்பிவிட்டேனென்றும் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.''

''இருந்தாலும் அவர்கள் உன்னைத் தேடிக் கண்டுபிடித்தது ' ஆச்சரியம் தான்!''

''எனக்கு அப்படித் தோன்றவில்லை. இதில் என்ன கஷ்டம்? தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒருத்தி. ஐந்து லட்ச ரூபாயுடன் வடக்கே இருந்து கிளம்பியவள் ஏதாவது குக்கிராமத்தில் போயா குந்தியிருப்பாள்? சென்னையில்தான் தேட வேண்டும் என்று வந்திருக்கிறார்கள்.''

''ஆனால் அப்போது பிளாக்மெயில் செய்யும் நோக்கம் அவர்களுக்கு இல்லையோ?''

''கரெக்ட். மன்சுக்லாலின் சொத்தில் பங்கு கேட்டுப் பார்க்கலாம் என்று நினைத்து வந்திருக்கிறார்கள். அவர், உயில் எழுதி வைத்திருந்தாலும் கூட நான் ஆயிரம் இரண்டாயிரமாவது கொடுத்து அனுப்புவேன் என்பது அவர்கள் எண்ணம்.''

''இங்கே தாங்கள் தேடி வந்தவள் சாருலதா என்ற பெயரில் பிரபலமாகியிருப்பதாக அவர்களுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. கூடவே பிளாக்மெயில் செய்யும் எண்ணமும் தோன்றிவிட்டது. அந்த முறையில் அதிகமாகப் பணம் பண்ணலாமே!''

''சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளவும் பிளாக்மெய்லுக்கு ஓர் ஆதாரத்தைத் தேடவும் அலகாபாத்துக்குத் திரும்பிப் போனார்கள். முன்பு ஒரு தடவை வீட்டுக்கு வந்தபோது, கல்யாணத்துக்குப் பிறகு நான் கணவருடன் எடுத்துக் கொண்ட புகைப்படம் சுவரில் சட்டம் போட்டு மாட்டப்பட்டிருப்பதைப் பார்த்திருக்கிறார்கள். அதில் ஒரு மூலையில் ஸ்டுடியோ பெயரைப் படித்த ஞாபகம் அவர்களில் ஒருவனுக்கு இருந்திருக்கிறது. நேராக அங்கே போய்ப் பழைய நெகடிவ்களையெல்லாம் தேடித் தங்களுக்குத் தேவையானதை எடுத்துக் கொடுக்கவும் சில பிரிண்டுகள் போட்டுத் தரவும் ஐம்பது ரூபாய் கொடுத்திருக்கிறார்கள்.''

''இதையெல்லாம் அந்த அயோக்கியர்களே உன்னிடம் சொன்னார்களாக்கும். திருட்டு ராஸ்கல்ஸ். ஐம்பது ரூபாய் முதலீடு ஐம்பதாயிரம் கிடைக்க வழி வகுத்திருக்குமே!''

''கன்னிப் பெண்ணாக வேஷம் போடுவதற்கு நான் கட்டும் அபராதம்!''

''நமக்குக் கல்யாணம் ஆன பிறகு நீ அபராதம் செலுத்தவும் வேண்டாம்;



## ந(ை)கச்சுவை ஷாக்!

நகத்தை அடிக்கடி கடிக்கும் பழக்கமுள்ளவர்களை மாற்றுவதற்காக அமெரிக்காவில் ஒரு புதுக் கருவி கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இச்சிறிய கருவியைப் பொருத்திக் கொண்டால், நகத்தைக் கடித்ததும் 'ஷாக்' அடிக்கும். இப்படிச் செய்வதால், சில நாட்களில் நகம் கடிக்கும் பழக்கமே மறந்து விடுமாம்!

ஆதாரம்: "டிட்பிட்ஸ்"
தகவல்: வி. எஸ். குமாரி

---

வேஷம் போடவும் வேண்டாம். இப்போதிருப்பது போலவே எப்போதும் லட்சுமிகரமாகத் தோற்றமளிக்கலாம். உன் கடந்த கால வாழ்க்கை எனக்குத் தெரியும்; தெரிந்துதான் கல்யாணம் செய்து கொண்டேன் என்று மஹிபால், சந்திரபாலிடம் சொல்லிவிட்டுப் போகிறேன். கழுத்திலே தாலி ஏறிய பிறகு உன்னைப் பற்றிய பழைய விவரங்களை அவர்கள் வெளியிட்டாலும் சமூகத்தில் உனக்கிருக்கும் அந்தஸ்தோ, கௌரவமோ, செல்வாக்கோ குறைந்து போக வழியில்லை. தைரியமாக நீ எல்லாரிடமும் வழக்கம் போல் பழகலாம். இதையெல்லாம் புரிந்துகொண்டதும் 'பிளாக் மெய்ல் செய்ய நமக்கு இனி ஆதாரம் ஏதுமில்லை; இனி நம் ஜம்பம் சாயாது' என்று அந்த இருவரும் வந்த வழியே திரும்பி விடுவார்கள். சரிதானா நான் சொல்வது?"

"நூற்றுக்கு நூறு சரி!"

"நம் கல்யாணம் நடந்து விட்டால் பிறகு குணசீலன் — கமலா திருமணமும் தடையின்றி நிறைவேறும் இல்லையா?"

"வாஸ்தவம்தான்."

"உன் அப்பா ரொம்ப மன அமைதி பெறுவார். தமது விருப்பம் போல் அவர் ரிஷிகேசமோ, ராமேசுவரமோ எங்கு வேணுமானாலும் போகலாம்."

"அதுவும் சரிதான்."

"அப்படியானால் கிளம்பு."

"எங்கே?"

"நான் பார்க்கப் போகலாம், ஜோஸியரிடம்!" அவன் எழுந்து நின்று அவள் கையைப் பற்றி இழுத்தான்.

"எனக்கு அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. என்ன அவசரம்? உட்காருங்கள்."

"இன்னமும் என்ன தயக்கம்? ஒரு வேளை உன் தொழில் வர்த்தக விவகாரங்களில் கணவன் என்ற முறையில் நான் தலையிட்டுத் தொந்தரவு கொடுப்பேன் என்று நினைக்கிறாயா?"

"உங்களுக்கு அதிலெல்லாம் சிரத்தை இருக்காது என்பது எனக்குத் தெரியும்."

"பிறகு?"

"வேணு! உங்களுக்கு என்னைவிடச் சிறந்தவளாக ஒரு பெண் மனைவியாக அமைய வேண்டும் என்று நான் ஆசைப் படுகிறேன். நீங்கள் மிகவும் உயர்ந்த பண்புகளை உடையவர்; லட்சிய நோக்குக் கொண்டவர். நான் விதவை என்பது மட்டுமில்லை; பணத்தாசை பிடித்துத் தரக் குறைவான காரியங்களையும் செய்துள்ளவள். உங்களுக்கு நான் தகுதியானவள் அல்ல."

சுற்றுச் சூழ்நிலை பற்றிக் கவலைப்படாமல் சட்டென்று அவள்கரத்தைப் பற்றித் தன் அதரங்களில் ஒரு விநாடி ஒற்றி எடுத்தான் வேணுகோபால். நாத் தழுதழுக்கக் கூறினான்: "சாரு! நீ இப்படிப் பேசியதிலிருந்தே உன்னிடம் உயர் பண்புகளும் உள்ளன என்பது வெளியாகவில்லையா? சந்தர்ப்பச் சூழ்நிலைகள் சிலரைச் சில விதமாக இயக்குகின்றன; அவ்வளவுதான். உன்னைவிடச் சிறந்த பெண்கள் இந்த உலகத்தில் இருக்கிறார்கள். ஆனால் நான் காதலிப்பது குற்றங் குறைகள் உள்ள இந்தச் சாருலதாவைத்தானே! அவ்வாறு இருக்க என்னை மணக்கத் தகுதியுள்ளவள் என்று வேறு ஒருத்தியை நான் எப்படித் தேடிப் போக முடியும்? கல்யாணத்துக்கு நீ சம்மதம் தெரிவிக்காவிட்டால் வாழ்நாள் முழுதும் பிரம்மச்சாரியாக நான் காலம் கடத்த வேண்டியது தான்."

"இப்போது இப்படித்தான் சொல்வீர்கள். நாளைக்கு ஒரு விதவையை நீங்கள் மணந்து கொண்டதாக எல்லோருக்கும் தெரிந்து விட்டால்? ஒரு ஸெகண்ட் ஹாண்ட் காரை நீங்கள் வாங்கினால் கூட, 'வேணுவுக்கு ஸெகண்ட் ஹாண்ட் சரக்கில் எப்போதுமே அலாதி மோகம்' என்று உங்களை யாராவது கிண்டல் செய்வார்கள். அப்போது உங்கள் மனம் வேதனை அடையும், இல்லையா?"

"அப்பா! அவ்வளவு தூரம் யோசிக்க வேண்டுமா? ஆனால் சரி, அதற்கும் பதில் சொல்லுகிறேன். நிச்சயம் எனக்கு மனக் கஷ்டம் ஏற்படத்தான் செய்யும்; ஆனால் அது ஒரு நண்பன் இப்படிப் பேசினானே என்பதற்காகத் தான் இருக்குமே ஒழிய உன்னை மணந்து கொண்டதற்காக என் மனம் வேதனைப் படாது. திருப்திதானா?"

சாருலதாவின் இமைகள் தாழ்ந்தன. அவனை ஏறிட்டுப் பார்க்க, அவனுடைய தீவிரத்தைக் காணப் பயந்தாள்.

அவன் தொடர்ந்தான்: "நீ ஒரு விதவை என்பதை முதன் முதலாக

# மக்களின் தேர்வு

## லிப்டன்




## ஹிமாலயன் கோல்டன் டஸ்ட்

லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் சாதாரண டீ அல்ல!

எல்லோருக்கும் உகந்த எல்லாச் சிறப்புகளும் இணைந்தது. இயற்கையிலேயே எல்லோரும் விரும்பி ஏற்பது இது!

கெட்டியான பானம்; நிறைந்த செறிவு; சிறந்த மணம். இவை மட்டுமல்ல—ஒவ்வொரு பாக்கெட்டிலும் அதிக அளவு கோப்பைகள் கிடைக்கின்றன. பருகுவதில் ஓர் இன்பம்; பிறருக்குத் தருவதிலும் ஓர் இன்பம்!

மக்களின் தேர்வு—அதுவே லிப்டன் ஹிமாலயன் கோல்டன் டஸ்ட் டீ.



**லிப்டன் என்றாலே நல்ல டீ**

LHGC-9 TAM

அறிந்து கொண்டபோது எனக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது சாரு. அதை நான் ஒளிக்க விரும்பவில்லை. ஆனால் அதனால் உன்மீது எனக்கிருந்த காதல் பாதிக்கப்படவில்லை என்பது சத்தியம்.''

''வேணு! அவசரப்படாமல் சில நாட்கள் யோசித்துப் பாருங்கள். உங்களுக்கு என்மீது ஏற்பட்ட அனுதாபத்தைக் காதல் என்று தவறாகப் புரிந்து கொண்டு பின்னால் அவதிப்படப் போகிறீர்கள்!''

''நான்ஸென்ஸ்'' என்றான் வேணுகோபால். ''உன்மீது அனுதாபம் எனக்கு எப்போது பிறந்தது? நீ சிறுமியாக இருந்தபோதும், பதினைந்து வயதுக் குமரியாக இருந்தபோதும் உனக்கு ஏற்பட்ட அனுபவங்களைத் தெரிந்து கொண்ட பிறகு. ஆனால் அதற்குப் பல மாதங்களுக்கு முன்பே உன்மீது எனக்குள்ள காதலை நான் வாய் விட்டுச் சொன்னதில்லையா? வா, போகலாம்.''

அவளைக் காரில் ஏற்றிக் கொண்டு கிளம்பினான் வேணுகோபால்.

''எங்கே போகிறோம் நாம்?''

''மயிலாப்பூர் அலமேலுமங்காபுரத்தில் எனக்குத் தெரிந்த ஒரு ஜோஸியர் இருக்கிறார். அவரிடம் நான் ஜோஸியம் பார்க்க வருவதில்லை என்று அவருக்கு ரொம்பக் குறை. என் ஜாதகமே என்னிடம் கிடையாது; நான் அவரிடம் எதற்குப் போகப் போகிறேன்? இப்போது 'முகூர்த்த நாள் குறித்துக் கொடுங்கள்' என்று கேட்டுத் தட்சிணை கொடுத்தால் சந்தோஷப் படுவார்! பாவம், நல்ல மனுஷன்!'' உற்சாகமாகப் பேசினான் வேணுகோபால்.

சாரு பதில் கூறவில்லை.

''கொஞ்சம் சிரித்துத்தான் வையேன். கல்யாணப் பெண் எதையோ பறி கொடுத்து விட்டது போல் உட்கார்ந்திருக்கலாமா?''

''வேணு! நீங்கள் ஒரு காந்தியவாதி என்பதை நிரூபிக்க இந்த விதவையை மணந்து கொள்ள வேண்டிய அவசியமில்லை.''

''உன் சந்தேகங்களுக்கு ஓர் எல்லையே கிடையாதா, சாரு? நான் பெரிய ஹீரோவாக விளங்க வேண்டும் என்பதற்காக இந்தக் காரியத்தைச் செய்யவில்லை. உன்மீதுள்ள அநுதாபத்தாலோ அல்லது காந்திஜியின் நூல்களை நான் படித்திருப்பதாலோ இப்படி நான் இயங்கவில்லை. உன்னை மனைவியாக அடைய வேண்டும் என்ற ஒரே ஆசைதான்




## ஹங்கேரிக்கு நஷ்டம் ஸ்பெயினுக்கு லாபம்!

உலகக் கால்பந்தாட்டக்காரர் புஷ்காஸ் 1953ல் இங்கிலாந்தில் சர்வதேசக் கால்பந்தாட்டப் போட்டியில் வெகு நன்றாக ஆடி அனைவரது கவனத்தையும் கவர்ந்தார். ஹங்கேரி நாட்டைச் சேர்ந்த புஷ்காஸ் புதாபெஸ்ட் புரட்சியின்போது ஹங்கேரியை விட்டு ஓடி ஸ்பெயினில் அடைக்கலம் புகுந்தார். அவரைச் சிறைப்பிடிக்க முயன்று தோல்வி கண்டதும் ஹங்கேரி ரேடியோ அவர் இறந்துவிட்டதாகவே கதை கட்டியது. புதாபெஸ்ட் புரட்சியினால் புஷ்காஸை இழந்ததுடன் ஹங்கேரி ஆட்டக்காரர்கள் உலகக் கோப்பையையும் கோட்டை விட்டார்கள்! ஹங்கேரிக்கு நஷ்டம்; ஸ்பெயினுக்கு லாபம்! தலைசிறந்த கால்பந்தாட்டக்காரர் புஷ்காஸை ஸ்பெயின் நாடு பெற்று விட்டது!

-- குண்டுமணி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

எனக்கு. உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளா விட்டால் என் வாழ்க்கை நிறைவு பெறாதே என்ற சுயநல நோக்கம்தான்.''

''உங்களைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன். இத்தனை நாட்கள் பொறுத்தீர்கள். இன்னும் கொஞ்சம் 'டைம்' கொடுங்கள்.''

''இந்த விஷயத்தில் மட்டும் நீ யோசிக்க ஆரம்பித்தால் வாழ்நாள் முழுதும் கழிந்தாலும் முடிவெடுக்க மாட்டாய். அதனால் உனக்காக நானே தீர்மானித்து விடுகிறேன்.''

''வேண்டாம்; சீக்கிரமே உண்டு இல்லை என்று நானே சொல்லிவிடுகிறேன்.''

''சரி என்று நீ தலையாட்டிச் சந்தோஷத்துடன் சம்மதமளிக்க நாலு நாள் அவகாசம் தருகிறேன், சாரு! ஆனால் இல்லை என்ற பேச்சை மட்டும் எடுக்காதே. அதை நான் ஒரு நாளும் ஒப்புக் கொள்ளவே மாட்டேன்'' என்றான் வேணுகோபால்.

(தொடரும்)

"யாருக்காக நான் வாழ்கிறேன்? எதற்காக இந்த உடலுக்கு ஊட்டம் கொடுத்து உயிரை இதில் பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறேன்? எனக்கு இருந்த ஒரே உயிர்ப் பிடிப்பு என்னை விட்டுப் பிரிந்து போய்விட்ட பிறகும் எந்த சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்காக நான் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கிறேன்? ஓடியாடி, உழைத்து ஒவ்வொன்றும் தேடி என் கையாலேயே சமையல் செய்து, நானே என் கையால் எடுத்துப் போட்டுக் கொண்டு தனியே உட்கார்ந்து சாப்பிட்டு... சேச்சே! இதைவிட.... இதைவிட...."

சட்டென்று இடுக்கிட்டு நின்றது சிரௌதிகளின் சிந்தனை. நெஞ்சை ஏதோ அடைப்பது போலிருந்தது. சுரீரென்று வலி! கண நேரத்துக்குத்தான். பிறகு அது மறைந்து விட்டது. இப்போதெல்லாம் இருந்தாற் போலிருந்து இந்த மாதிரி வலி தோன்றுகிறது. ஜீரண சக்திக் குறைவுதான் நெஞ்சு வலிக்குக் காரணம் என்று டாக்டர் சொன்னதை அவர் ஒப்புக்கொள்ளவில்லை. பாரு அவர் நெஞ்சில் எவ்வளவு பலமான அதிர்ச்சியை ஏற்படுத்தி விட்டுச் சென்றாளென்று டாக்டருக்கு எப்படிப் புரிய வைப்பது? அப்போதே நின்றுபோயிருக்க வேண்டிய நெஞ்சு தானே இன்னும் வெட்கமில்லாமல் இயங்கிக்




கொண்டிருக்கிறது! இந்த வலிகூட வராமல் இருக்குமா என்ன?

எழுந்து தாம்பூல வாயைக் கொப்பளித்து விட்டு டாக்டர் கொடுத்திருந்த மாத்திரை ஒன்றை எடுத்துப் போட்டுக் கொண்டு மீண்டும் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டார் சிரௌதிகள். பாருவின் நினைவு அவர் நெஞ்சில் முள்ளாகத் தைத்து வேதனை செய்தது. பாசத்தை யெல்லாம் கொட்டி உயிருக்குயிராக வளர்த்த ஒரே பெண் எப்படி ஒரேயடியாக அவர் உறவைத் துண்டித்துக் கொண்டு போய்விட்டாள்! இனி தந்தையின் முகத்தில் விழிக்கவே முடியாதென்ற நிலையை ஏற்படுத்திக் கொண்டு சென்றுவிட அவள் மனம் எப்படித் துணிந்தது? அவள் தாயாரை இழந்த நாளிலிருந்து தாயாருக்குத் தாயாராய், தந்தைக்குத் தந்தையாய் அவளுடைய எதிர்கால நலம் ஒன்றையே கருத்தில் கொண்டு அவர் பட்ட பாடெல்லாம் விழலுக்கிறைத்த நீராகிவிட்டதே!

ஒவ்வொரு விதத்திலும் பாரு மேன்மையாயிருக்க வேண்டுமென்று அவர் எப்படியெல்லாம் தன்னலத் தியாகம் செய்து வந்தார். தம்முடைய சகாக்களுடைய குத்தல் பேச்சுக்களைப் பொருட்படுத்தாமல் பாருவைப் படிக்க வைத்தார். யார் யாரிடமோ மன்றாடிச் சிபாரிசு பிடித்து அவளுக்கு மருத்துவக் கல்லூரி நூல் நிலையத்தில் வேலையும் வாங்கிக் கொடுத்தார். ஆயிற்று. அவளுக்குத் தகுந்த இடமாகப் பார்த்துக் கலியாணம் செய்து வைப்பதுதான் பாக்கி. அதற்கும் சீக்கிரம் வழி பிறக்க வேண்டும் தெய்வமே, என்று அவர் பிரார்த்தனை செய்து கொண்டிருந்த வேளையில்... பாருவின் அந்தக் கடிதம்... அவர் நெஞ்சைச் சுக்கு நூறாக்கி வாழ்விலேயே அவரை நம்பிக்கை இழக்கச் செய்தது அந்தக் கடிதம்... அந்தக் கடிதத்தை எழுதுவதற்கா அவளை அவ்வளவெல்லாம் படிக்க வைத்தார்!

கடிதத்தை அவர் சுக்குநூறாகக் கிழித்தெறிந்து விடவில்லை. ஒரு வருஷமாக அது அவர் பெட்டிக்கடியில் பத்திரமாக இருந்தது. தன்னுடைய அன்பை மகள் உதறி எறிந்து விட்டுப் போய் விட்டாள் என்ற நிராசையை



மறக்க நினைத்தவர் அவளுடைய துரோகத்தின் சின்னத்தை மட்டும் ஏன்தான் அவ்வளவு கருத்துடன் காப்பாற்றி வந்தாரோ! அந்த நிராசையைத் தாம் பாராட்டவில்லை என்று தம்மைத் தாமே ஏமாற்றிக் கொள்ளவா? அந்தக் கடிதத்தின் வாசகம் அவருக்கு மனப்பாடமாகி யிருந்தது. ஒரு தடவை இரண்டு தடவையா அதைப் படித்திருப்பார்!

"என்னுடைய முடிவு உங்களுக்கு எவ்வளவு வேதனை அளிக்கும் என்று எனக்குப் புரிகிறது. நான் மன்னிக்க முடியாத குற்றம் செய்து விட்டதாகவே நீங்கள் நினைப்பீர்கள் என்றும் நான் அறிவேன். ஆனால் நான் செய்த முடிவே சரியானதென்று நாளடைவில் நீங்கள் உணர முடியுமென்றே நம்புகிறேன். என்னுடைய எதிர்காலம் உங்கள் மனத்தில் ஒரு சுமையாய் இருப்பதை நான் விரும்பவில்லை. பெண்ணைப் பெற்றவர்களை

இரக்கமில்லாமல் வியாபார நோக்குடன் வாட்டி எடுக்கும் நம் சமூக அமைப்பில் என் எதிர்காலம் எப்போதுமே உங்களுக்குத் தீராத பிரச்னையாக இருக்கப் போகிறதே என்று நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். என் நல்ல அதிர்ஷ்டம் பாஸ்கர் என் வாழ்வில் தோன்றி என் கவலையைத் தீர்த்து வைத்து விட்டார். அவர் நம்முடைய இனத்தவர் இல்லை என்பதைப் பெரிதுபடுத்திக்கொண்டு மனத்தை அலட்டிக் கொள்ள வேண்டாம். உண்மையில் அவர் எனக்கு வாழ்க்கைத் துணைவராவதற்கு நான் எவ்வளவோ கொடுத்து வைத்திருக்க வேண்டுமென்று தான் நான் நினைக்கிறேன்...''

பாஸ்கர் யார், எப்படி இருப்பான், என்ன செய்கிறான், எதுவுமே அவருக்குத் தெரியாது. தெரிந்துகொள்ள அவர் முயற்சி செய்யவும் இல்லை. பராபரியாகக் காதில் விழுந்த செய்திகள்... பாஸ்கர் ஒரு டாக்டராம். புரசைவாக்கத்திலோ வேப்பேரியிலோ



ஒரு நர்ஸிங் ஹோம் நடத்திக்கொண்டிருக்கிறானும்....

''சிரௌதிகளே, உம்ம பெண் புளியங் கொம்பைத்தான் பார்த்துப் பிடிச்சிருக்கா. அந்த டாக்டரோட அவ காரிலே போறதை அடிக்கடி பார்க்கிறேன்...'' ராமு சாஸ்திரிகள் சொன்ன தகவல் இது. அவருடைய ஜாகை திருவல்லிக்கேணியில் இருந்தாலும் புரசைப் பகுதியில்தான் அவருடைய புரோகிதமெல்லாம்.

''பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணறது எதுக்கய்யா? அவ சந்தோஷமா இருக்கணும்னுதானே? உம்ம பாரு சந்தோஷமாத்தான் இருக்கா. நானே என் கண்ணுலே பார்த்தாச்சு. நீர் மத்ததெல்லாம் மறந்துட்டு நிம்மதியா இரும்!''

அவருடைய வேதனையை அறிந்துதான் ராமு சாஸ்திரிகள் அவ்வளவு பரந்த நோக்

**அம்மா அம்மா!**
**மாடர்ன் தலைப்பு!**



''ஆ. க., தொ. க. படிச்சாச்சு. கு.நாவும் பி. க.வும் படிச்சிட்டு உன்கிட்டேயே கொடுத்திடறேன்.''

---

கூடல் பேசினரோ? ராமு சாஸ்திரிகள் மட்டுமென்ன? புரோஹிதத் துறையில் சிரௌதிகளுக்குப் பழக்கமான மற்றவர்களும் அதே பரந்த நோக்குடன் அப்படி ஒரு விஷயம் நடந்ததாகவே காட்டிக்கொள்ளாமல்தான் சிரௌதிகளிடம் பழைய மரியாதையுடனே பழகி வந்தார்கள். பட்டணமாயில்லாமல் மற்ற சாதாரண ஊராயிருந்தால் சகாக்களிடையே அவ்வளவு பெருந்தன்மையை எதிர்பார்த்திருக்க முடியுமா? பாருவின் செய்கை எப்படியெல்லாம் விகவரூபம் எடுத்து அவருடைய வாழ்க்கையைப் பாதித்திருக்கும்! அவர் வெளியே தலை நீட்டவே முடிந்திருக்காதே! புரோகிதத் தொழிலைத் தொடர்ந்து நடத்தியிருக்கவேமுடியாதே!

திரும்பத் திரும்பப் பாருவையே நினைத்து அவர் ஏன் மனம் குமைய வேண்டும்? அப்படி ஒரு பெண் தமக்குப் பிறக்கவேயில்லை என்று அவரால் இருந்துவிட முடியாதா ?

தம் தகப்பனாரின் நினைவு வந்தது சிரௌதிகளுக்கு. அவர் அப்படித்தான் மன உறுதியுடன் இருந்தார். அவருடைய ஒரே பெண் யாரோ ராணுவ ஆசாமியுடன் தன் வாழ்வைப் பிணைத்துக் கொண்டு சென்று விட்ட போது அதை நினைத்துப் பெரியவர் சிறிதும் மனம் தளரவில்லை. ''தொலையட்டும் ! எனக்கு அப்படி ஒரு பெண் இருந்தாள் என்பதையே நான் மறந்தாயிற்று!'' என்று சொன்னவர் அதைச் செயலிலும் காட்டிவிட்டாரே ! அவருடைய இறுதி மூச்சு வரை அவர் அந்தப் பெண்ணின் பெயரைக்கூட வாயால் சொன்னதில்லை.

அப்போதும் அந்தத் தமக்கையை நினைத்து மாதக் கணக்காக மனத்தை வாட்டிக் கொண்டவர் சிரௌதிகள்தான். தம்முடைய ஒரே சகோதரியான அகிலாவிடம் அவர் உயிரையே வைத்திருந்தார். திருவையாறு பாடசாலையில் அவர் வேதாத்தியயனம் செய்து கொண்டிருந்த நாட்கள் அவை. விடுமுறைக்கு அவர் வீட்டுக்கு வந்த போதுதான் அகிலாவின் துணிகரமான போக்கு பற்றி அவருக்குத் தெரிந்தது. தகப்பனாரின் உறுதி பற்றியும் அவர் அறிந்தார். தகப்பனாருக்குத் தெரியாமலே அவர் அகிலாவை நினைத்து நினைத்து அழுது கொண்டிருந்தார். தமக்கையின் அந்தச் செய்கை அவருக்குத் தாங்க முடியாத அதிர்ச்சியளித்தது. அவளை மீண்டும் பார்க்க முடியாது என்ற ஏமாற்றத்தை அவரால் பொறுக்கவே முடியவில்லை. வருஷக் கணக்காக அந்த வடு அவர் மனத்திலிருந்து மறையவில்லை.

சிரௌதிகளின் சிந்தனை ஓட்டத்தில் திடீரென்று ஓர் அதிர்ச்சி! இதென்ன! வழி வழியாக இந்தக் குடும்பத்துக்கு இப்படி ஒரு சாபக்கேடா ? அந்தத் தலைமுறைக்கு அகிலா. இந்தத் தலைமுறைக்குப் பாரு! இப்படி ஒரு விபரீதம் நேரலாம் என்ற உள்ளுணர்வு சிரௌதிகளுக்கு முன்னமேயே ஏன் தோன்றாமல் போயிற்று ? தோன்றியிருந்தால் பாருவைப் படிக்க வைத்திருப்பாரா ? அதன் பிறகு வேலைக்குத்தான் அனுப்பியிருப்பாரா ?

''என்ன சிரௌதிகளே, யோசனை பலமாயிருக்கு !'' என்று கேட்டுக் கொண்டே சைக்கிளில் வந்து இறங்கினார் ராமு சாஸ்திரிகள்.

பரபரப்புடன் எழுந்த சிரௌதிகள் சாஸ்திரிகளை வரவேற்றுச் சாய்வுநாற்காலியில் அமரச் சொல்லி உபசரித்தார். பின்பு அவரருகே தான் ஒரு முக்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தார்.

'' இன்னிக்குப் பேப்பரிலே ஒரு நல்ல சேதி கண்ணிலே பட்டுது. அதை உம்மகிட்டே காட்டணும்னுதான் ஓடி வந்தேன். நீர்தான் பேப்பரே பார்க்கிறது கிடையாதே !'' என்று கூறிய சாஸ்திரிகள் கையோடு கொண்டு வந்திருந்த தினத்தாளைப் பிரித்துச் சிரௌதிகளின் கையில் கொடுத்து, ஒரு குறிப்பிட்ட பகுதியைப் படிக்கும்படி அவரிடம் சுட்டிக் காட்டினார். எடுப்பான தோற்றமுடைய ஓர் இளைஞனின் புகைப் படத்தைப் பிரசுரித்து அதன் கீழ் அவனைப் பற்றிய குறிப்பும் போடப்பட்டிருந்த பகுதி அது. ''டாக்டர் பாஸ்கர். மருத்துவத் துறையில் இவர் செய்து வரும் ஆராய்ச்சிகளுக்கு மேல்நாடுகளிலும் நல்ல வரவேற்பு இருக்கிறது. அமெரிக்காவுக்கே வந்து இவருடைய ஆராய்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தும்படி அமெரிக்க சர்வகலாசாலை ஒன்றிலிருந்து இவருக்கு அழைப்பு வந்திருக்கிறது. அந்த அழைப்பை ஏற்றுக் கொண்டு டாக்டர் பாஸ்கர் இன்னும் இரண்டொரு மாதங்களில் அமெரிக்கா செல்லலாம் என்று எதிர் பார்க்கப்படுகிறது.....''

'' எப்படி சிரௌதிகளே! பாருவோட ஜாதக விசேஷம்தான் அந்த டாக்டருக்கு இப்படியெல்லாம் யோகம் அடிக்கிறது !'' என்றார் ராமு சாஸ்திரிகள்.

ஒரு பெருமூச்சுடன் தினப் பத்திரிகையை மடித்துச் சாஸ்திரிகளிடம் கொடுத்தார் சிரௌதிகள்.

''எப்படியாவது க்ஷேமமாயிருந்தால் சரி. மத்தப்படி எனக்கும் பாருவுக்கும் ஸ்நானப் ப்ராப்தி இல்லேன்னு ஆயிடுத்தே !''

'' சாஸ்திரம், சம்பிரதாயம்னு ஆயிரம் இருக்கலாம் சிரௌதிகளே. ஆனால் ரத்த பாசம் எங்கே போயிடும்? தான் ஆடாட்டாலும் தன் சதை ஆடாமல் இருக்குமா ?''

''இல்லே, இல்லே ! அப்படி ஒரு பெண் எனக்கு இருக்கா என்கிறதையே மறக்கத்தான் நான் முயற்சி செய்யறேன் !''

''எங்க காலேஜுக்கு வந்திருக்கிற புது பிரின்ஸிபால் சுத்த மோசம் ! நாமெல்லாம் தலை குனிஞ்சபடி புரஸ் பண்ணிண்டு வராங்க.''

''அப்படியா?''

''ஆமாம், தலையை பின்னோடா போட்டுண்டு பூ வைச்சுண்டு, காதிலே தோடு போட்டுண்டு பட்டுப் புடவையும், கட்டமிட்ட ரவிக்கையும் உடுத்திண்டு அடக்கமா...அழகா...சீசீ கேவலம்!''

— பிட்டு



''வீண் முயற்சி ! உம்மாலேயும் அந்தப் பெண்ணே மறந்திட்டு இருக்க முடியாது.''

''பாரு என்னைப் பத்தி நினைக்கிறவளா யிருந்தா....''

''அவ மனசு எனக்குத் தெரியும் சிரௌதிகளே! உம்மை நினைக்கத்தான் அவ உருகிப் போறா. போன வெள்ளிக்கிழமை அவளைக் கோவில்லே பார்த்தேனே ! என்கிட்டே ஓடி வந்து உம்மைப் பத்தித்தான் விசாரிச்சாள். உமக்காக அவ மனசு எப்படித் தவிச்சின்டிருக்குங்கிறதை அவள் பேச்சிலேயிருந்து புரிஞ்சிண்டேன். ஆனா அவள் என்ன செய்ய முடியும்? உம்ம முகத்திலே விழிக்கிறதுக்கே துணிச்சல் இல்லேயே அவளுக்கு!''

'' அப்படியே துணிச்சல் இல்லாமெ இருக்கட்டும்! அதுதான் அவளுக்கும் நல்லது, எனக்கும் நல்லது!'' என்றார் சிரௌதிகள்.

சாஸ்திரிகள் ஒன்றும் சொல்லவில்லை. பேப்பரை மடித்துப் பையில் வைத்தவாறு ஒரு பெருமூச்சுடன் எழுந்து சைக்கிளில் ஏறிக் கொண்டு அங்கிருந்து சென்று விட்டார்.

சற்று நேரம் பிரமை பிடித்தாற்போல் உட்கார்ந்திருந்தார் சிரௌதிகள். பத்திரிகையில் பிரசுரமாகியிருந்த பாஸ்கரின் புகைப்படம்! அவனுடைய எடுப்பான தோற்றம் அவர் நெஞ்சில் பதிந்திருந்தது. பாஸ்கருக்கு அருகே பாருவைக் கற்பனை செய்து பார்த்தது அவர் மனம். அழகியான பாருவுக்கு பாஸ்கர் எல்லா விதத்திலும் பொருத்தமான ஜோடி என்பதில் சந்தேகமில்லை. அதே சமயம் அவன் வேறு இனத்தவன் என்ற எண்ணம் ஏன் அவரை அயர்வடையச் செய்ய வேண்டும்? மனம் பொருந்துவதுதானே முக்கியம்? மற்றவையெல்லாம் நாமாகக் கற்பனை செய்து கொண்ட கட்டுப்பாடுகள்தானே ! இந்தக் காலத்தில் அத்தகைய கட்டுப்பாடுகளுக்கு ஏதாவது அர்த்தம் உண்டா ?

என்ன இருந்தாலும் பாரு அவரைச் சிறிதும் மதிக்காமல் தானாகவே அம்மாதிரி ஒரு முடிவுக்கு வந்தது எப்படிச் சரியாகும்? ஆனால் பாரு அந்த விஷயத்தில் அவருடைய சம்மதத்தைக் கேட்டிருக்க முடியுமா ? அதற்கு அவர் என்ன பதில் சொல்லியிருப்பார்? பாருவை வீட்டை விட்டே வெளியே போகக் கூடாதென்று தடை செய்திருக்க மாட்டாரா ? உடனடியாகச் சம்பிரதாயம் தவறாமல் எந்த வரனையாவது நிச்சயம் செய்து அவள் காலில் அவளைக் கட்டிவிட ஏற்பாடு செய்திருக்க மாட்டாரா ? அப்புறம் பாருவின் வாழ்வு என்ன ஆகியிருக்கும் ? குளிப்பதற்கு ஒரு வாளித் தண்ணீர்கூடச் சரியாகக் கிடைக்காத ஒண்டுக் குடித்தனத்தில் அருமை தெரியாத ஆசாரப் பிச்சுக்களின் கொடுமைகளுக்கெல்லாம் ஆளாகிக் கொண்டு அடுக்கடுக்காகக் குழந்தைகளைப் பெற்று, எக்க ளெடுத்து, எலும்பும் தோலுமாகி....

ஒரு சிலிர்ப்புடன் எழுந்தார் சிரௌதிகள். அந்தக் கற்பனையே அவரை நடுங்கச் செய்தது. தள்ளாடும் நடையுடன் அவர் உள்ளே நடந்து தமது தகரப் பெட்டியை வைத்திருந்த இடத்துக்குச் சென்றார். பெட்டியைத் திறந்து அதன் அடியிலிருந்து ஒரு நீண்ட கவரைக் கையில் எடுத்தார். முக்கியமானவை என்று அவர் கருதியவற்றையெல்லாம் அந்தக் கவரில்தான் பத்திரப்படுத்தி வைத்திருந்தார் அவர். பாரு எழுதிய கடிதம் மேலாகவே இருந்தது. அதன் ஒவ்வொரு வார்த்தையும் அவருக்கு . மனப்பாடமாகியிருந்தும் இப்போது அதை மறுபடியும் பிரித்துப் படிக்க வேண்டும் என்ற ஆவலை அவரால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. மணி மணியாக முத்துக் கோத்தாற் போலிருந்த பாருவின் கையெழுத்து அவர் கண்களில் நீர் சுரக்கச் செய்தது. கண்ணீர் பார்வையை மறைத்தும் அவர் கடிதத்தைப் பிரித்தவாறே வைத்துக் கொண்டு தம்மை மறந்து உட்கார்ந்திருந்தார். சட்டென்று அவருக்கு நினைவு வந்தது. ஐந்து வருஷங்களுக்கு முன்னால் ஹைஸ்கூலில் படிப்பு முடிந்ததும் பாரு எடுத்துக் கொண்ட அந்தப் படம் ! அதை அந்தக் கவரில்தான் வைத்திருந்ததாக ஞாபகம். கவரில் இருந்தவற்றை உதறிக் கீழே கொட்டிய போது பாருவின் அந்தப் புகைப் படம் மேலாக விழுந்தது. ஆவலுடன் அதை எடுத்துப் பாருவின் சௌமியமான வதனத்தையே கண் கொட்டாமல் பார்த்தார் சிரௌதிகள். இதழ்களில்தான் என்ன குறுகுறுப்பு? வருங்காலத்தைப் பற்றிய களங்கமற்ற நம்பிக்கை சுடர்விட்டது அந்தப் பார்வையில். இவ்வளவு அழகிய புகைப் படத்தை அவர் ஏன் இருட்டறையில் வைப்பது போல் இந்தக் கவருக்குள் புதைத்து வைத்திருக்கிறார்? கவர்ச்சிகரமாகச் சட்டம்

## துணுக்கு!

மராட்டியர் பிள்ளையாரைப் பற்றியும், முருகனைப் பற்றியும் என்ன சொல்கிறார்கள் தெரியுமா?

"பிள்ளையார் திருமணமானவராம். அவருடைய மனைவியின் பெயரைக்கூட அவர்கள் அறிந்து வைத்திருக்கிறார்கள்! அதுவாவது பரவாயில்லை. முருகன் கட்டைப் பிரம்மச்சாரியாம்!

வியந்தவர் : 'ஜெயந்தி'

போட்டுப் பெருமையுடன் மாட்டி வைக்க வேண்டிய படம் அல்லவா அது?

அந்தப் போட்டோவைத் தனியே எடுத்து வைத்துவிட்டு மற்ற சாமான்களை மீண்டும் கவரில் வைக்க அவர் முனைந்த போது....

இதென்ன! இது யாருடைய படம்? இது.... அவர் தமக்கை அமலாவுடையதல்லவா? ஆமாம்! முப்பது ஆண்டுகளுக்கு முன்னும் அமலா கிட்டத்தட்ட பாருவின் வயதாயிருக்கும் போது எடுத்த அந்தப் போட்டோவைத் தமக்கையின் நினைவுக்காகப் பத்திரப்படுத்தி வைத்திருந்தார் சிரௌதிகள்! அமலாவின் இதழ்களிலும் அதே குறுநகை! விழிகளில் அதே குறுகுறுப்பு.... வருங்காலத்தைப் பற்றிய கலங்கமற்ற நம்பிக்கை... விசித்திரம்தான்! அந்தத் தலைமுறைக்கு அமலா.... இந்தத் தலைமுறைக்குப் பாரு! பாவம், அமலா! இப்போது இந்த உலகில் இருக்கிறாளோ, மறைந்தே விட்டாளோ!

ஒரு பெருமூச்சுடன் அந்தப் போட்டோவை மீண்டும் கவருக்குள் பத்திரப்படுத்தி வைத்துக் கவரைப் பெட்டிக்கடியில் பழையபடியே வைத்து மூடிவிட்டு எழுந்தார் சிரௌதிகள். பாருவின் போட்டோவை இன்றே கோவிலுக்குப் பக்கத்தில் உள்ள கண்ணாடிக் கடையில் சட்டம் போடுவதற்குக் கொடுக்க வேண்டும்......

கோவில் என்றதும் அவருக்கு இன்னொரு விஷயமும் நினைவு வந்தது. பாரு பாஸ்கருடன் தன் வாழ்வைப் பிணைத்துக் கொண்டு அன்றுடன் ஒரு வருஷம் பூர்த்தியாகிறது! அவருக்கு அது வேதனை தரும் நாளாயிருக்கலாம். ஆனால் பாருவுக்கு எவ்வளவு முக்கியமான நாள் அது. அடுத்தடுத்து ஒவ்வொரு வருஷமும்.... ஒவ்வொரு வருஷமும்.... அவள் வாழ்வு மகிழ்ச்சி நிரம்பியதாக இருக்க வேண்டும். எல்லா நலன்களும் அவள் வாழ்வில் நிறைய வேண்டும்... இவ்வாறெல்லாம் அவர் உள்ளம் பிரார்த்தனை செய்யாமல் இருக்குமா? பாஸ்கர் அவர் மகளை அவரிடமிருந்து பிரித்தவனாயிருந்தாலும் அவன் தானே அவளுக்கு எல்லாம்! அவன் நீண்ட ஆயுளுடன் அமோகமாயிருக்க வேண்டும். பாருவின் கழுத்தில் அவன் கட்டிய மாங்கல்யம் என்றும் சுடர் விட்டுப் பிரகாசிக்க வேண்டும்.... கண்ணாடிக் கடைக்குப் போவதற்கு முன்னும் கோவிலுக்குப் போய் அவ்விருவரின் நல்வாழ்வுக்காகப் பிரார்த்தனை செய்து அர்ச்சனையும் செய்து வர வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டார் சிரௌதிகள்.

அர்ச்சனை முடியும் வரையில் சந்நிதியில் நின்று மனமுருகப் பிரார்த்தனை செய்து கொண்டு பிராகாரத்தை வலம் வந்த பிறகு சிரௌதிகள் கோவிலுக்கு வெளியே வந்து நேரே கண்ணாடிக் கடைக்குச் சென்றார். கைப்பையில் பத்திரமாக வைத்திருந்த பாருவின் போட்டோவை எடுத்துக் கடைக்காரனிடம் கொடுத்து மறுநாளே சட்டம் போட்டுத் தயாராக வைத்திருக்கும்படி சொல்லிவிட்டு அவர் அங்கிருந்து செல்லத் திரும்பிய போது..

இதென்ன! அந்தக் கடையில் அமலாவின் போட்டோ எப்படி வந்தது? ஆமாம்! அது அவர் தமக்கை அமலாவின் படமேதான்! கிட்டத்தட்ட அவரிடமிருந்த போட்டோவின் மறு பதிப்பு! அழகாகப் பிரேம் செய்து மாட்டப்பட்டிருந்தது அந்தப் போட்டோ!

'ஏம்ப்பா, ' அந்தப் போட்டோ இங்கே எப்படி வந்தது?''

''வேறே எப்படி வரும்ங்க! பிரேம் போடறதுக்காக நேத்து கொண்டு வந்து குடுத்தாரு ஒரு ஐயா. அவங்கம்மா சின்ன வயசிலேயே காலமாயிட்டாங்களாம். இது அந்த அம்மாவுக்குக் கலியாணமான புதிசிலே எடுத்த படமாம். அந்த ஐயா இதை ரொம்பப் பக்குவமா பாதுகாத்து வந்திருக்காருன்னு தெரியுது.....''

நெஞ்சில் ஏதோ எழுந்து தொண்டையில் வந்து அடைத்தது சிரௌதிகளுக்கு. அமலாவுக்குப் பிள்ளை இருக்கிறானா? சிரௌதிகளின் மனத்தில் ஒரே படபடப்பு.

''அவரை நான் பார்க்கணுமே... அவர் அவர்......''

''ஏங்க, உங்க உறவு மனுஷரா?''

''ஆமாம்ப்பா, நெருங்கின உறவு. எப்போ இங்கே வரதாச் சொல்லியிருக்கார்?''

''நேத்து இந்த நேரத்துக்குத்தான் கொண்டு வந்து குடுத்தாருங்க. இன்னிக்கு இதே நேரத்துக்கு வர்றதாச் சொல்லிட்டுப் போனாரு'' என்று அவன் சொல்லிக் கொண்டிருக்கும்போதே அழகிய புத்தம் புது கார் ஒன்று கடை எதிரே வந்து நின்றது.

''அதோ, சொல்லி வச்சாப்பிலே அந்த ஐயாவே காரிலே வந்திட்டாரே!''

ஆவல் துடிப்புடன் திரும்பிப் பார்த்தார் சிரௌதிகள். காரிலிருந்து இறங்கிக் கதவை அறைந்து சாத்தி விட்டுத் திரும்பிய அந்த மனிதர்....

யார்? இது பாஸ்கரல்லவா? இன்று தினத்தாளில் பார்த்த அதே முகம்! அப்படியானால் அப்படியானால்....?

மறு நிமிஷம் காரின் மறு பக்கத்திலிருந்து இறங்கிய பாருவும் பாஸ்கரின் அருகே வந்து நின்றாள். திருமண நிறைவு நாளைக் கொண்டாடும் மங்கலத் தோற்றத்துடன் எல்லா விதத்திலும் பொருத்தமாயிருந்த அந்த ஜோடி கடையை நெருங்கி வந்த அதே சமயம்......

சிரௌதிகளின் பெருமிதம் நிறைந்த நெஞ்சில் விம்மல் பொங்குவது போல் பொங்கித் திடீரென்று ஓர் அடைப்பு! சுரீரென்று மரண வலி! மறுகணம் அவர் நிலை விழுந்து கீழே சாய்ந்து விட்டார்!




உயர்வின் சின்னம்

ESTD: 6-1-1947

# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்

பதிவு செய்யப்பட்ட அலுவலகம் :
திருநெல்வேலி - 6 போன் : 274

மத்திய அலுவலகமும், முதலீடுகள் பெற்றுக்கொள்ளுமிடமும் :
36-B, மவுண்ட் ரோடு (ஸ்பென்சர் & கம்பெனி எதிரில்)
சென்னை - 2 போன் : 84244

31-3-1969ல் அதிகாரம் பெற்ற மூலதனம் ரூ. 5 லட்சம்
மொத்த ஆஸ்திகள் ரூ. 2.07 கோடி. சீட்டில் ஈடுபடுத்திய தொகை ரூ. 4.12 கோடி
செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வும் 1.88 லட்சம்

---

கல்கத்தா ரிசர்வ் பாங்க், பாங்க் அல்லாத நிதி கம்பெனிகள் டிபார்ட்மெண்ட் 29-10-66ல் வெளியிட்ட நோட்டிபிகேஷன் DNBC 1/ED (S) 66/- பாரா 2 (1) (f)ன் ஸப்கிளாஸ் (x)ன் படி.

**எமது கம்பெனியின் இரு டைரக்டர்களால் காரண்டி செய்த லோன் வாங்கப்படுகிறது**

| தவணை | வட்டி விகிதம் ரூ. 300லிருந்து ரூ. 5,000 வரை | ரூ. 5,000-க்கு மேல் |
|---|---|---|
| ஒரு வருடம் | $8\frac{1}{2}\%$ P. A. | $9\%$ P. A. |
| இரண்டு வருடம் | $9\%$ P. A. | $9\frac{1}{2}\%$ P. A. |

6 மாதங்களுக்கு ஒரு முறை வட்டி செக்குகள் அனுப்பப்படுகின்றன. அவைகளை எங்கள் எந்தக் கிளையிலும் ரொக்கமாக மாற்றிக் கொள்ளலாம்.

---

**தொழில் விபரம் :**

தமிழ்நாடு, பாண்டிச்சேரியிலும் (அந்தந்த மாநில சிட் பண்டு ஆக்ட் பிரகாரமும்) பெங்களூரில் சிட் பண்டு ஆக்டில் இல்லாத பிரதேசம், பிரதி மாதம், மாதம் மும்முறை தினசரி உள்ள ஏலச் சீட்டுகள் நடத்துதல் ரூ. 10,000 வரை மதிப்புள்ள ஏலச் சீட்டுகள் எங்கள் 35 ஆபீஸ்களிலும் நடத்தப்படுகின்றன.

**அலுவலக நிர்வாகம்**

மானேஜிங் டைரக்டர் :
ஸ்ரீ AR. ராமசாமி

டைரக்டர்கள் :
ஸ்ரீ M. A. M. கோவிந்தன் செட்டியார்
ஸ்ரீமதி RM. மெய்யம்மை ஆச்சி

மத்திய அலுவலக மானேஜர் :
ஸ்ரீ K. A. ராம், B. A., B. L.

---

**கடந்த மூன்று வருடங்களில் ஆதாயமும் டிவிடெண்டும் :**

| வருடம் | வரி கொடுப்பதற்கு முன் லாபம் | வரி கொடுத்த பின் லாபம் | டிவிடெண்ட் விகிதம் |
|---|---|---|---|
| 1966-67 | 79686-41 | 27686-41 | 16% |
| 1967-68 | 89468-58 | 28648-58 | 17% |
| 1968-69 | 98125-26 | 34125-26 | 17% |

**பொறுப்புகள் 31-3-1969**

| | | |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் & ரிசர்வ் நிதி | ரூ. | 1,88,601 |
| பிக்ஸட் டிபாஸிட் | ரூ. | 10,400 |
| ஷேர் ஹோல்டர் டிபாஸிட்டுகள் | ரூ. | 3,41,050 |
| காரண்டி செய்த லோன்கள் | ரூ. | 24,42,274 |
| தற்காலிகக் கடன் | ரூ. | 1,30,417 |
| சீட்டு இதர பொறுப்பு வகைகள் | ரூ. | 1,76,55,328 |
| மொத்தம் | ரூ. | 2,07,68,070 |

---

புதிய M. குரூப் ரூ. 25,000 மதிப்புள்ள சீட்டுகள் எங்கள் 12, கிலேதார் தெரு, திருச்சி (போன் : 4276) லும், 43, விஸ்வநாத ராவ் ரோடு, மாதவநகர், பெங்களூர்-1 (போன்: 75955)லும், 4-A, சண்முகம் ரோடு, தாம்பரம், சென்னை-45லும், (போன் : 89499) 13, வடக்கு வெளி வீதி, மதுரை (போன்: 4880) யிலும், 36-B, மவுண்ட் ரோடு, சென்னை-2 (போன் : 84244)லும் நடைபெறும்.

ஆடிட் செய்த பாலன்ஸ் ஷீட்டுகள் வேண்டுபவருக்கு அனுப்பப்படும்

K. A. ராம், பி.ஏ., பி.எல்.
மத்திய அலுவலக மானேஜர்
அனுமதித்த தேதி : 5-1-70

V. மல்லையா, எம்.ஏ., பி.எல்.
பொதுஜனத் தொடர்பு அதிகாரி

AR. ராமசாமி
மானேஜிங் டைரக்டர்

ஒரே ஜலதோஷம்...
சாப்பாடே பிடிக்கலே..
கஷ்டமா இருக்கு!

# விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தின் தொல்லைகளை உடனே நிறுத்துகிறது.

விக்ஸ் வேபோரப்பின் சிறப்பு, அதை ஜலதோஷம் பிடிக்கும் இடங்களான மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு. இங்கெல்லாம் நேரடியாகத் தடவலாம். நீங்கள் ஜலதோஷத்தின் தொல்லைகளிலிருந்து உடனே நிவாரணம் பெறுகிறீர்கள். தாராளமாக மூச்சுவிடுகிறீர்கள். சுகமடைகிறீர்கள்.

விக்ஸ்வேபோரப் குணமளிப்பதன் காரணம் அது ஜலதோஷத்தை எதிர்த்து உள்ளும் புறமும் இரு வழிகளில் போராடுகிறது.

1) 
உடம்பின் மேலே

2) 
உடம்பின் உள்ளே

1) விக்ஸ் வேபோரப் ஜலதோஷத்தால் ஏற்படும் உடல்வலியைப் போக்குகிறது.
2) வேபோரப் ஆவியாக மாற்றப்படுகிறது. இந்த ஆவியில் மருந்து இருக்கிறது. ஒவ்வொரு முறை சுவாசிக்கும்போதும் இது உள்ளே ஆழச் சென்று, மூக்கு அடைப்பைப் போக்குகிறது. தொண்டை கரகரப்பை நிறுத்துகிறது. மார்பு கபத்தை நீக்குகிறது. ஜலதோஷத்தின் தொல்லைகள் மறைகின்றன.

## முக்கியமான குறிப்புகள்



விரைவாக குணம்பெற, மூக்கு, தொண்டை, மார்பு, முதுகு இங்கெல்லாம் விக்ஸ் வேபோரப்பை நன்கு தேயுங்கள்.
ஜலதோஷம் நீங்கும்வரை இதைத் தொடர்ந்து செய்து வரவும்.




**ஜலதோஷத்திற்கு மருந்து விக்ஸ் வேபோரப்**

## சுட்டிப் பயல்!



தபால் தலை குறைவாக ஒட்டப்பட்டிருந்த கடிதத்துக்காகத் தபால்காரருக்கு முப்பது பைசா 'டியூ' கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. ராமதுரையிடம் அப்போது கையில் சில்லறைக் காசு இல்லாததால் தம் மனைவியைக் கூப்பிட்டுக் கேட்டார். அவளிடமும் ஒரு பத்துப் பைசா நாணயம்தான் இருந்தது. பாக்கி இருபது பைசாவுக்கு என்ன செய்வது என்று யோசித்தவாறு தம் சட்டைப் பையைத் துழாவிக் கொண்டிருந்தார் ராமதுரை. அதைக் கவனித்துக் கொண்டிருந்த அவருடைய ஆறு வயதுப் பையன், "நான் தரட்டுமா அப்பா?" என்று கூறியவாறே இரு பத்துப் பைசா நாணயங்களைத் தனது டிராயர் பையிலிருந்து எடுத்துக் கொடுத்தான்.

தபால்காரர் சென்றதும் பையனிடம் தாய், "ஏதடா உன்னிடம் காசு?" என்று கேட்டாள்.

உடனே பையன் மிக உற்சாகத்துடன், "அப்பாவுக்கு ஞாபகமறதி அதிகமாகிக்கிட்டு வருது அம்மா. இரண்டு வாட்டி என்னை 'டிரைவ் இன்' ஹோட்டலுக்கு அழைச்சுக்கிட்டுப் போனாருல்லே? அப்போ அந்த சர்வர் கொண்டு வந்து வச்ச பாக்கி சில்லறை முழுசையும் எடுத்துக்கிறதுக்குள்ளே அப்பாவுக்கு அவசரம்! இரண்டு வாட்டியும் பத்து காசை மேஜை மேலேயே மறந்து விட்டுட்டாரு. அப்புறம் சொல்லிக்கலாம்னு நான் அதை எடுத்து அப்பாவுக்குத் தெரியாமல் என் பைக்குள்ளே போட்டுகிட்டு வந்தேன் அம்மா!" என்றான்.

-"வேட்டு"

## "எறும்புதின்னி" என்னும் பெங்கோலின்



"எறும்பு தின்னி" என்று காரணப் பெயரால் அழைக்கப்படும் 'பெங்கோலின்' என்ற இனத்தைச் சேர்ந்த பிராணிகள் இந்தியாவில் காணப்படுகின்றன. இவை மூன்றடி நீளம் உள்ளவை. வால் நீண்டும் அடியில் பருத்தும் காணப்படும். ஆண் பெங்கோலினைவிடப் பெண் பெங்கோலின் உருவத்தில் மிகச் சிறியதாய் இருக்கும். உடலில் முள்ளுடன் கூடிய செதில்கள் அடுக்கடுக்காய்க் காணப்படும். காதுகள் இருக்க வேண்டிய இடத்தில் சிறு பிளவுகளே இருக்கின்றன.

இந்தப் பிராணியின் முக்கிய உணவு எறும்புகளும் கரையான்களும் ஆகும். இதன் நாக்கு மிகவும் நீளமாகவும் மெல்லியதாகவும் ஒருவிதப் பசையுடனும் இருக்கும். சட்டென்று வெளியே நாக்கை நீட்டினால் எறும்புகள் ஒட்டிக் கொள்கின்றன. பிறகு இது நாக்கை உள்ளே இழுத்து இரையை உண்கிறது.

இவற்றுக்குப் பற்கள் கிடையா. ஒவ்வொரு காலிலும் கூர்மையான நகத்துடன் கூடிய ஐந்து விரல்கள் உண்டு. இவை மிகவும் மெதுவாக நடக்கும். மனிதர்கள் வீடு கட்டி வசிக்கிறாற்போல் பூமிக்கடியில் எட்டிலிருந்து பன்னிரண்டு அடிவரை கீழே குகை போன்ற அமைப்பில் ஓர் ஆண் பெங்கோலினும் ஒரு பெண் பெங்கோலினும் தம்முடைய ஒன்று அல்லது இரண்டு குட்டிகளுடன் வசிக்கும். இரவில் இரை தேடுவதே இவற்றின் வழக்கம்.

இதன் வயிற்றில் சிறு கூழாங்கற்கள் போன்றவை காணப்படுகிறது. எனவே இதைக் 'கல் தின்னி' என்றும் சொல்வார்கள். ஆபத்து வந்தால் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஒரு பந்து போல் சுருண்டு முன்னங் கால்களுக்குள் தலையைப் புதைத்துக் கொள்ளும். நீளமான வால் பந்து போன்ற உடலைச் சுற்றிக் கொள்ளும்.

இந்தப் பிராணி குட்டி போட்டுப் பால் கொடுக்கும் இனத்தைச் சேர்ந்தது.

-- எஸ். சாரதாம்பாள்

---

விஞ்ஞான மேதைகள் வில்பரும் ஆர்வெலும் காரியத்திலே கண்ணாயிருப்பவர்கள். பேச்சென்றால் எட்டிக் காய். விஞ்ஞான மேதைகள் அளித்த விருந்தில் வில்பரைப் பேச அழைத்தார்கள்; "இதில் ஏதோ தவறு நேர்ந்திருக்கிறது; ஆர்வெல்தான் பேசக் கூடியவர்" என்று கூறி அமர்ந்தார் வில்பர். பிறகு ஆர்வெலைப் பேசும்படி கட்டாயப்படுத்தினார்கள். அந்த கணம் ஆர்வெல் எழுந்திருந்து, "வில்பர்தான் உரையாற்றி விட்டாரே! அதற்குமேல் நான் பேச என்ன இருக்கிறது?" என்று கூறி உட்கார்ந்து விட்டார்!



பேச்சைவிடச் சாதனைதான் முக்கியம் என்று அந்த விஞ்ஞான மேதைகள் நிரூபித்து விட்டார்கள். - பி.எஸ்.எம்.

# அட்டைப் படக் கதை

இன்னும் சரியாக விடியவில்லை. அடிவானம் சிவப்புப் பாளங்களாக வெடிக்க ஆரம்பித்திருந்தது. வீட்டு வாசலில் மாட்டைக் கொண்டு வந்து கட்டிப் பால் கறக்கும் இடையன் வந்து சேர்ந்து நிர்மலாவை எழுப்பி விட்டான்.

கழுத்தைச் சுற்றிப் படிந்த கணவன் ராமுவின் கையைத் தூக்கம் கலையாமல் இலேசாக விலக்கிவிட்டு எழுந்து வந்தாள். ஜன்னலுக்கு வெளியே தெரிந்த உலகம், இருட்டிய பிறகு திரையில் சினிமாப் பார்ப்பது போலத் தெரிந்தது. அன்று ஞாயிற்றுக்கிழமை. ராமு நேரம் கழித்துத்தான் எழுந்திருப்பான்.

தலைக் கலைவைச் சரி செய்து கொண்டு பாலுக்குப் பாத்திரம் கழுவிய நீரிலேயே கொஞ்சம் முகத்திலும் தெளித்துக் கொண்டு வாசற்புறம் வந்தாள். பால் கறந்து முடிந்து, இடையன் மேல் நுரையை வாயினால் ஊதி விலக்கிக் கொண்டிருந்தான்.

மாமனாரும் மாமியாரும் உடன் இருந்த போது அவளுக்கு இந்தத் தொந்தரவே இல்லை. அவர் விடியற்காலை நான்கு மணிக்கே தூக்கத்தை உதறிக் கொண்டு எழுந்து விடுவார்.

அந்த நிம்மதியான வாழ்க்கை அப்படியே தான் மூன்று ஆண்டுகளாக நடந்துகொண்டிருந்தது. மணமாகி அவர்கள் தனிக் குடித்தனம் வைத்திருந்தது ஆறு மாதங்கள் கூட இல்லை. அதற்குப் பின் மாமனார் வேலையில் ஓய்வு பெற்று அவர்களோடு வந்தாயிற்று. அப்புறம் இந்த வாழ்க்கைதான்.

இப்போது மாமியார் புறப்பட்டுப் போய் மூன்று மாதங்கள் ஆயிற்று. பெட்டி மூடியை முழங்காலால் அழுத்திக் தாழ்ப்பாள் போட்டுவிட்டு அவர் நிமிர்ந்தது நேற்றுப் போல் இருக்கிறது.

ஒரு நாள் நிர்மலாவையும் வைத்துக் கொண்டு ராமு அவன் தாயாரிடம் சொன்னதுதான். ''உன் வயதும் அனுபவமும் அவளுக்கு இல்லை; உண்மைதான். ஆனால் அவள் வயது ஆசைகளும் பிடிவாதங்களும் அவளுக்கு இருக்கத்தான் செய்யும். நீ விட்டுக் கொடுத்து, அனுசரித்துப் போனால்தான் முடியும்.''

மாமியார் பதில் சொல்லவில்லை. கையில் எடுத்த கரண்டியைக் கீழே வைக்க மறந்து நின்றாள். முகத்தில் உணர்ச்சிகள் உறைந்தாற்போல் நின்றன. ஏதோ பேச முயன்று கையைத் தூக்கி ஜாடை மட்டும் காட்டினாள். கண்கள் உருக ஆரம்பித்து விட்டன. ராமு உள்ளே திரும்பி வந்துவிட்டான்.

மறுநாள் அவர்கள் பயணம் நிச்சயமாகி விட்டது.

விடிந்து வெய்யில் சுரீலெனக் குத்தத் தொடங்கியாயிற்று. ராமு எழுந்து, பற்களுக்கிடையே 'பிரஷ்'ஷைக் கடித்த வண்ணம் வாசற்படியில் விசிறி விழுந்து கிடந்த செய்தித்தாளைப் படிக்கத் தொடங்கியிருந்தான். பக்கத்து வீட்டு ரேடியோவில் காலை நேரத்துக்கச்சேரி இசைக்கஆரம்பித்திருந்தது.

''நான் ஸ்கூட்டரை ரிப்பேர் பார்த்தாக வேண்டும். கிளம்பிப் போய்விட்டுப் பன்னிரண்டு மணிக்குத்தான் வருவேன். நீ என்ன செய்யப் போகிறாய்?'' பற்களிடையே 'பேஸ்ட்' குழம்பும் விதத்தில் பேச்சு கொச்சையாக வந்தது. 'ஸ்டல்'லின் படர்ந்து விரியும் நீலத் தளிர்ப் பூவான கொழுந்தைப் பார்த்தபடியே நிர்மலா பதில் சொன்னாள்.

''நான் என் வேலையைப் பார்க்கிறேன். சூப்பர் மார்க்கெட்டுக்குப் போக வேண்டும். சாமான்கள் வாங்கினால் எடுத்து வர நீங்கள் ஸ்கூட்டரில் வந்தால் சௌகரியமாக இருக்கும் என்று நினைத்தேன்... சரி. நான் பார்த்துக் கொள்கிறேன்.''

அரை யோசனையும், குறை வாக்கியமுமாக ஏதோ சொல்லிக் கொண்டு ராமு கொல்லைப் பக்கம் போய் விட்டான். பாத்திரமும், கையுமாக அவள் கொல்லைப் புறம் போனபோது அவன் முகம் கழுவிக் கொண்டிருந்தான். குழாயடி சிமிட்டிமேல் நீரின் பளபளப்பு தனியாய்ப் பிதுங்கிற்று.

''அப்போது நான் ஸ்கூட்டரைத் தயார் செய்து கொண்டு பன்னிரண்டு மணிக்குச் சூப்பர் மார்க்கெட் வாசலுக்கு வருகிறேன். நீயும் குழந்தையும் அங்கே காத்துக் கொண்டிருங்கள்.''

வெய்யிலின் வெள்ளித் தகடு கண்ணைக் கூசிற்று. ரிக்ஷாவிலிருந்தபடி சாலையின் இரு பக்கங்களையும் கண்ணால் துடைத்துக் கொண்டே வந்தாள் நிர்மலா. பத்து ஆள் உயரத்தில் சினிமா விளம்பரம், பஸ்ஸுக்காக எறும்புச் சாரியாக மக்கள், பச்சையும் நீலமுமாய்த் துணிகள் தொங்கும் கடை, பத்திரிகைத் தோரணங்களுக்கு நடுவே ஐஸ் சோடா கலர் கடை - ரிக்ஷாவை நிறுத்தி இறங்கினாள்.

''அம்மா, ஐஸ் கலர்.''

குழந்தை நீலா முந்தானையைப் பற்றி இழுத்தாள். விரல்கள் பிரிந்து கடையை நோக்கி விசிறிக் காட்டின.

''அம்மா, உனக்கும் எனக்கும் ஐஸ்.''

சிரிப்புத்தான் வந்தது. முன்புறம் கீற்றுப் பந்தலை நீட்டி, நிற்கும் மண்ணில் தண்ணீர் தெளித்து வைத்திருந்த இடம் காலுக்கு இதமாக, குளிர்ச்சியாகத்தான் இருந்தது.

''இரண்டு கலர் போடுங்க-ஐஸ் போட்டு!''

மூடியைப் பிய்த்து நுரைக்க மஞ்சள் நிறக் கலரைக் கொத்தளிப்போடு கண்ணாடித் தம்ளரில் ஊற்றினான் அவன். அதன் கிறுகிறுப்பையும், பவுன் நிற நுரையையும் விழிகள் போல் மிதந்த ஐஸ் கட்டிகளையும் பார்த்தபோது நீலாவுக்குச் சிரிப்பு பீறிட்டது.

குடித்து முடித்ததும் கைப் பையைப் பிரித்து எடுத்தாள். மூன்று பத்து ரூபாய் நோட்டுகளுக்கு நடுவே ஓர் ஐந்து ரூபாய். அதை எடுத்துச் சில்லறை மாற்றிப் பணம் கொடுத்து விட்டு அவசரமாகச் சாலையைக் கடந்தாள், குழந்தையின் விரல்களைப் பற்றிக் கொண்டு. சாலைகளின் சந்திப்பில் தேங்கி இருக்கும் வண்டிகள் வருமுன் சாலையைக் கடந்து கரை சேரும் அவசரம். பின்னாலேயே சீறிக்கொண்டு வரும் கார்களின் கோபமான ஊதல்கள் கேட்டு முன், நடை பாதையை

எட்டி சூப்பர் மார்க்கெட்டின் வாசலில் நுழைந்து விட்டாள்.

கட்டமிட்ட ஸ்டால்களுக்கு நடுவே நகரத் தொடங்கியாயிற்று. குழந்தைக்குப் பால் உணவு, மாவுப் பொட்டலங்கள், ராமுவுக்குச் சோப்பு, துணிகள் துவைக்கத் தூள், இப்படி நிறையச் சேர்ந்து விட்டன. நீலா தலையைப் பிடித்துக் கொண்டே நடந்து வந்த போது பொறுமை நழுவிவிடும் போலத்தான் தோன்றிற்று.

மணி பன்னிரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது. நீலா பசியில் சிணுங்க ஆரம்பித்து விட்டாள். சட்டையைத் தூக்கி வயிற்றைத் தொட்டுத் தொட்டுக் காண்பித்தாள்.

''வீட்டுக்குப் போகலாம்மா.''

குழந்தையின் கண்ணில் இலேசாக ஈரம் காணக்கூட ஆரம்பித்து விட்டது. சிறகு விரிப்பாய்க் கை நிறையக் கட்டிக் கொண்டு வந்த

# நேற்று இன்று நாளை

- லக்ஷ்மி சுப்பிரமணியம் -

சாமான்களை மேஜையின் மேல் குவித்து இறக்கினாள். ஒவ்வொன்றாக எடுத்து வைத்து 'பில்' போடத் தொடங்கினார், மேஜையடியில் உட்கார்ந்திருந்தவர்.

''இருபத்து நாலு ரூபாய் தொண்ணூறு காசு.''

பென்சில் நுனியால், பில்லின் எண்கள் வரிசையைச் சந்தேகத்துக்குத் தட்டிக் கூட்டிக் கொண்டே நிமிர்ந்தார் அவர். நிர்மலா கைப் பையைப் பிரித்து நோட்டுக்காக விரல்களைத் துழாவினாள். ஒரு பத்து ரூபாய் நோட்டும், சில்லறைகளும்தான் தட்டுப் பட்டன. மூன்று பத்து ரூபாய் நோட்டுக்களில் மற்ற இரண்டும் எங்கே?

ஒரு நிமிடம் அவளால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. பிம்பம் தெரியும் மேஜைத் தகட்டின் மேல் கைப் பையைக் கவிழ்த்துக் கொட்டினாள். சில்லறைகள், வீட்டுச் சாவி, ஒரு தலைவலி மாத்திரை. இரண்டு பித்தான் வில்லைகள் எல்லாம் உருண்டன.

''என்னம்மா? என்ன ஆச்சு?''

''ம்ம்... பணத்தைக் காணோம்... பார்க்கிறேன்.''

சுற்றிலும் இருந்த கண்கள் யாவும் அவள் புறமாகத் திரும்பின. அப்படி அத்தனைபேர் முன்னிலையில் தன் கவனக் குறைவைப் பிரகடனமாக்கிக்கொண்டது, கைப்பையைப் பிரித்துக் கொட்டியது என்னவோ போல் இருந்தது.

ஜூஸ் கலர் சாப்பிட்ட இடத்தில் பிரித்து எடுத்த நோட்டுகள். இரண்டு பத்து ரூபாய் நோட்டுகள் ஒன்றாக ஒட்டிக்கொண்டிருந்தன. அங்கே விழுந்திருக்குமோ? அது அரை மணி நேரத்துக்கு முன்னால். இன்னும் அங்கே இருக்குமா?

''என்ன செய்யப் போறீங்க?''

அவருடைய குரலில் நினைவு மறுபடியும் தரை தட்டிற்று. அவளுக்கே புரியவில்லை. என்ன செய்யலாம்?

''விலாசத்தைக் குறித்துக் கொண்டு கொடுப்பீர்களா? இப்போ வீட்டுக்காரர் வந்து விடுவார். வீட்டுக்குப் போய்ப் பணம் கொண்டு வந்து கொடுத்துடறேன்.''

அவருடைய கீழுதடு பிதுங்கிற்று. அப்படி அவர்களிடையே வழக்கம் இல்லை. அவருடைய கண்கள் சாமான்களை மறுபடியும் எண்ணின. அவ்வளவையும் பொட்டலம் பிரித்து மறுபடி அந்தந்த இடத்தில் சேர்க்க வேண்டும். போட்ட பில்லை அடித்துத் தனியாய் வைக்க வேண்டும். பொழுதும் வேலையும் வீண். சற்று சலிப்புடன் நிமிர்ந்தார்.

''சாமான்களை வேணுமானால் அரை மணி நேரம் தனியாய் வைக்கிறேன். சீக்கிரமா போய்ப் பணம் எடுத்துக் கொண்டு வாங்க.''

முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு நகர்ந்தாள் நிர்மலா. முதுகின் பின்னால் வரிசையாகக் கண்கள் கூர்ந்து கவனிப்பதை உணருவது போல் ஒரு பிரமை. நிழலின் இருட்டையும், குளிர்ச்சியையும் தாண்டி வெளி வெய்யிலுக்கு வந்துவிட்டது புரியக்கூட இரண்டு நிமிடங்கள் ஆயின.

இருபது ரூபாய்! ராமுவிடம் என்ன சமாதானம் சொல்வது? எப்படி அந்த இடைவெளியைச் சரிக்கட்டுவது?

மாமியார் அடிக்கடி சொல்வதுண்டு: அவளுடைய கவனக் குறைவைப் பற்றி. வீட்டில் அதனால் நேர்ந்த சிறு நஷ்டங்கள் எத்தனையோ. சில சமயங்களில் அவை ராமுவிடமிருந்தும் கூடக் கோபமாய்த் தெறிக்கும். ஆனால் அவை வீட்டின் நான்கு சுவர்களுக்கு நடுவே. இதைப் போல இல்லை. அவ்வளவு பேர்களுக்கு நடுவே கைப் பையை அவிழ்த்து மேஜை மேல் கொட்டியது எத்தனை அவமானம்?

நினைக்கும்போது இப்போதும் முதுகுத் தண்டு சில்லென்றது. நின்ற இடத்தில் பிடி கொள்ளாமல் பாதங்களின் பரவாட்டம்.

நடந்து வந்து கொண்டே இருந்தபோது கண்கள் ஐஸ் சோடா கலர் கடையை நாடின. வாசற் பலகைகள் இறுக்கமாக விழுந்திருந்தன. சாப்பாட்டு நேரம். கடையே மூடிக் கொண்டு போயிருக்கலாம். கடையைக் கடந்து கொஞ்ச தூரம் போயிருப்பாள்.

''அம்மா, அம்மா, கொஞ்சம் நில்லுங்க!''

சட்டென்று முகம் திரும்பினாள். ஐஸ் கலர் பாட்டிலைச் சாவியை நெம்பித் திறந்தபோது, மேலே பார்த்த முகத்தின் ஞாபகம். அவர் தான்.

''ஒங்களை எங்கேயெல்லாம் தேடறதும்மா! கலர் பாட்டில் அடியிலே இரண்டு பத்து ரூபாய் நோட்டை விட்டுட்டுப் போயிட்டீங்களே! நானும் கவனிக்கவில்லை....''

கடைக்காரர் கைவிரல்களில் அலைந்த இரண்டு பத்து ரூபாய் நோட்டுக்களைப் பார்த்தபோது சில சமயம் காணாமற் போய் விட்டாளோ என்று பயந்த பிறகு நீலா மறுபடியும் கண்ணில் தென்படும் நேரம் உண்டாவது போன்ற உணர்ச்சி, நெஞ்சில் சில்லென்று இறங்கிற்று. அவளுடைய கவலைகளும் யோசனைகளும் திடீரென்று விலகி, மனத்துள் ஏற்பட்ட நிறைநிறைப்பு, எளிதில் ஏற்றுக் கொள்ளக் கூடியதாக இல்லை. நெற்றியில் வியர்வை முத்திவிட்டது.

இனிமேல் நடக்க முடியாது என்பதைப் போலக் குழந்தை கால்களைத் தழுவிச் சறுக்கு மரம் ஏறுவது போல் இடைவரை ஏறிவிட்டாள். சற்று முன்பாக இருந்தால் அதற்குப் பதிலாக முதுகில் ஓர் அடி இறங்கியிருக்கும். இப்போது அந்தச் சோர்விலும் கைவளைவில் எடுத்து வைத்துக் கொள்ளத்தான் தோன்றிற்று. மூச்சுப் போல் பெரிதாய்க் குளிர்ந்து வீசிய காற்று நெற்றி வியர்வையை ஒற்றியது.

மறுபடியும் திரும்பிப் போய்ப் பணத்தைக் கொடுத்துச் சாமான்களைப் பெற்றுக்கொள்வதா? நெற்றியில் உழுத வரிகளோடு முகம் நிமிரும் மேஜை அடி குமாஸ்தாவிடம் ''இந்தாரும் பணம், சாமான்களை இப்போது நம்பிக் கொடுக்கலாமா?'' என்று முகத்தில் வெற்றியொளி வீசச் சொல்லி விட்டு வரலாமா?

மனமில்லை. மறுபடியும் அங்கே போக அவளுக்கு மனமில்லை.

அதே சாலையில் இன்னொரு பெரிய ஸ்டோர் இருக்கிறது. அங்கே வாங்கிக் கொள்ளலாம். மறுபடியும் அவள் அந்த சூப்பர் மார்க்கெட்டுக்குப் போக மாட்டாள். நெஞ்சில் ஏதோ இலேசாக இடித்தது. இது யாருடைய குற்றம்? இதற்கு யாருக்குத் தண்டனை? இது என்ன பிடிவாதம்? அவளுக்குப் புரியாமல் இல்லை. ஆயினும் மனம் தன் தோல்வியை ஒப்புக் கொள்ள மறுத்தது.

பணத்தைக் கொடுத்துவிட்டு, மார்போடு அள்ளி அணைத்த சாமான்களோடு வெளியே வந்தாள். நடை பாதை அருகே வந்ததும், ஒரு ஸ்கூட்டர் சீறிக்கொண்டு வந்து, மேலே இடிப்பது போல நின்றது. ஸ்கூட்டரின் கால் பிடியில் படிந்த பூட்ஸிலிருந்து முகம்வரை பார்வை சட்டென்று நிமிர்ந்தது. ராமு.

''என்ன நிர்மல்? எங்கே போனாய்? அரை மணி நேரமாக உன்னை எங்கேயெல்லாம் தேடுகிறது?''

அவன் கேள்விக்கு உடனே பதில் சொல்ல முடியவில்லை. திடீரென்று அவன் அவளை அங்கே வந்து மறித்த அதிர்ச்சி விலக இரண்டு நிமிடங்கள் ஆயின.

''ஓ, நீங்கள் பன்னிரண்டு மணிக்குச் சூப்பர் மார்க்கெட் வாசலுக்கு வருவதாகச் சொன்னீர்கள் இல்லையா? ஐ ஆம் ஸாரி.''

''என்ன ஸாரி? அரை மணி நேரமாக நான் இங்கே குறுக்கேயும் நெடுக்கேயும் போய்க் கொண்டிருக்கிறேன். வீட்டு வரைக்கும் போய்ப் பார்க்க இருந்தேன் இப்போது.''

''போகிறதுதானே? நான் ரிக்ஷாவில் வந்துவிட்டுப் போகிறேன்.'' வெய்யிலின் சூடும், வரிசையாக நடந்த நிகழ்ச்சிகளில் விளைந்த சலிப்பும் சேர்ந்து அவளைப் பொறுமை இழக்கச் செய்தன.

''அட, பேசாமல் பின்னால் ஏறு. தவறும் செய்துவிட்டு வாய்ப் பேச்சுக்கு ஒன்றும் குறைச்சல் இல்லை.''

நிர்மலாவின் கண் இமைகள் எகிறிவிடும் போலத் துடித்தன. உணர்ச்சியின் வேகம் உடலில் 'விர்' என்றது.

''நான் நடந்து வருகிறேன். குழந்தையை மட்டும் அழைத்துப் போங்கள்.''

ராமுவின் புருவங்கள் நெறிந்து பின்னின. கடித்த பற்களிடையே சீற்றம் வெளிப்பட்டது.

''ஏறிக் கொள்கிறாயா இல்லையா?''

அவளுக்கு அவ்வளவு கோபம் வந்து அவன் அதுவரையில் பார்த்ததில்லை. அவளை அவன் அதைப் போலக் கடிந்ததே இல்லை. உள்ளே குமுறிக் கொண்டு வந்த உணர்ச்சி அழுகையாக வெடித்து விடும்போலிருந்தது. பதில் பேசாமல் ஸ்கூட்டரின் பின்புறம் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

வீட்டுக்குப் போனதும் நேரே குழந்தையை எடுத்துக் கொண்டு உள்ளே போய்விட்டாள். குழந்தையை நாற்காலியில் இறக்கி வைத்து விட்டு, ராமு சாமான்களுடன் உள்ளே வருவான் என்று காத்திருந்தாள். ஒரு நிமிடம்... இரண்டு...மூன்று... ஸ்கூட்டர் சத்தம் மட்டும் உதறிக் கொண்டு கிளம்பித் தேய்ந்து மறைந்து விட்டது.

வெளியே வந்து பார்த்தாள். படிக்கட்டில் சாமான்கள் இறக்கி வைக்கப்பட்டிருந்தன. சாப்பாட்டுக்குக்கூட அவன் உள்ளே வரவில்லை. அவனுடைய கோபத்தை அதை

# சென்னை மாநில கூட்டுறவு வங்கி லிமிடெட்

## 271, அங்கப்ப நாயக் தெரு, சென்னை-1

தந்தி விலாசம்: ''அர்பாங்க்''
தபால் பெட்டி எண்: 226

தொலை பேசி எண்
22766, 22767, 24689

எங்கள் வங்கியில் நீங்கள் போடும் டெபாசிட்டுகள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு அடிப்படையான விவசாயத்திற்கும் விவசாயத் தொழில்களுக்கும் உதவி செய்யும்

**சீசன் டிபாசிட்:** ரூ. 1,000ம் அதற்கு மேலும் (வருடத்திற்கு)

| | |
|---|---|
| 15 நாட்கள் முதல் 45 நாட்கள் வரை | 1.25% |
| 46 நாட்கள் முதல் 90 நாட்கள் வரை | 2.50% |

**பிக்சட் டிபாசிட்:** ரூ. 1,00ம் அதற்கு மேலும்

| | | | | |
|---|---|---|---|---|
| 91 நாட்களும் | அதற்கு மேலும் | 6 | மாதங்களுக்குள்ளாக | 4.50% |
| 6 மாதங்களும் | | 12 | | 5.00% |
| 12 மாதங்களும் | | 2 | வருடங்களுக்குள்ளாக | 5.75% |
| 2 வருடங்களும் | | 3 | | 6.00% |
| 3 வருடங்களும் | | 5 | | 6.25% |
| 5 வருடங்களும் | அதற்கு மேலும் | | | 6.75% |

**கரெண்ட் அகௌண்ட்:** (ரூ. 25000 வரை தினசரி நிலுவை பின்பேரில் வட்டி கணக்கிடப்படுகிறது.) 0.50%

**சேவிங்ஸ் பாங்க் அகௌண்ட்:** (5 தேதி முதல் மாதம் முடிய குறைந்த பட்ச நிலுவையின்பேரில் வட்டி கணக்கிடப்படுகிறது.) 3.50%

**ரெக்கரிங் டிபாசிட்:** தவணைகளுக்குப் பெறும் மொத்தப் பணம்:

| மாதத் தவணை | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 84 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 5ம் அதன் மடங்குகளும் | 62 | 126 | 198.60 | 273 | 355 | 442 | 535 |

**இதர விபரங்களை வங்கியின் கீழ்க்கண்ட அலுவலகங்களிலிருந்தும் பெறலாம்**

| கிளை அலுவலகம் பெயர் | முகவரி | தொலை பேசி எண் |
|---|---|---|
| மயிலாப்பூர்: | 32-A, லஸ் சர்ச் ரோடு, சென்னை-4 | 71262 |
| எழும்பூர்: | 68, எழும்பூர் ஹைரோடு, சென்னை-8 | 86510 |
| திருவல்லிக்கேணி: | 111, பெரிய தெரு, சென்னை-5 | 84692 |
| தியாகராயநகர்: | 19, பாண்டி பசார், சென்னை-17 | 442852 |
| காந்தி நகர்: | 78, இரண்டாவது மெயின் ரோடு, சென்னை-20 | 71132 |
| ஷெனாய் நகர்: | 6/1, செங்குந்த முதலித் தெரு, சென்னை-30 | 64834 |
| கெல்லீஸ்: | 2, மாதவாக்கம் டாங்க் ரோடு, சென்னை-10 | 64105 |
| மயிலாப்பூர் டாங்க்: | 10, தெற்கு மாட வீதி, சென்னை-4 | 73158 |
| சாந்தோம்: | 79, சாந்தோம் ஹைரோடு, சென்னை-28 | 74300 |
| கிரீன்வேஸ் ரோடு: | 14, கேசவபெருமாள்புரம், சென்னை-28 | 74215 |
| மவுண்ட் ரோடு: | 109, டி.-ஈ. மவுண்ட் ரோடு, சென்னை-18 (காமதேனு கூட்டுறவு சிறப்பு அங்காடி) | 440292 |
| சாஸ்திரி நகர்: | பி. 10, சாஸ்திரி நகர், சென்னை-20 | 76418 |

ஆர். கனகசபை, எம்.எல்.ஏ.
தலைவர்

டி. வர்த்தமானன்
காரியதரிசி

# 3 ஸ்விஷ் பிளேடுகள்

## மற்ற 5 பிளேடுகளுக்கு ஈடாக உழைக்கின்றன

## ஏன்?

1 சர்வதேச தரவிர்ணயங்களுக்கேற்ப, இறக்குமதியான டங்ஸ்டன் கார்பைட் கொண்டு செய்யப்படுகின்றன.

2 மூக்கிற்குக் கீழே வெட்டுகள் ஏற்படாமலிருப்பதற்கென மூலைகள் ரவுண்டாக்கப்பட்டுள்ளன.

3 ஒவ்வொரு பாட்சும், சுகமான க்ஷவரத்திற்கென, சோதனைக்குள்ளாகிறது.

4 மயிர்க்கால்களை ஊடுருவிச் செயல் புரிவதற்கென அல்ட்ரா கூர்மை.

5 அரிமானத்தை எதிர்ப்பதற்கும் நீடித்து நிற்கும் கூர்மைக்குமென, 1100° செ. உஷ்ணத்தில் பதப்படுத்தப் படுகின்றன.

6 அதிக மழமழப்பிற்கென, பிரத்யேகமான ஃபார்முலா TR-7, ஹை டென்ஸிடி பாலி டெட்ரா ஃப்ளோரோ எதிலீன் பூச்சு கொண்டவை.

7 இறக்குமதியான ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில் செய்யப்படுகின்றன.

8 தரக்கட்டுப்பாட்டையும், சீரான தரத்தையும் உறுதி செய்வதற்கென உற்பத்தியின் எல்லா நிலைகளிலும் பரிசீலிக்கப்படுகின்றன.

9 அதிக கூர்மைக்கு மல்டி-ஃபேஸெட் ஓரம்.




எனவே தான்... உங்களுக்கு
பாக்கெட்டிற்கு 3 ஸ்விஷ் பிளேடுகள் மட்டும் அளிக்கிறோம்.

விடக் கடுமையாக அவன் காட்டியிருக்க முடியாது....

கண்களை இறுக மூடியவாறு, உட்கார்ந்த நிலையிலேயே அவள் உடல் மருள் கண்டாற் போல ஊசலாடியது. மடியில் குழந்தை நிம்மதியாக உறங்க ஆரம்பித்து விட்டாள்.

குழந்தையைப் படுக்கையில் விட்டு விட்டு, சாமான்களை உள்ளே கொணர்ந்துவைத்தாள்.

சமையல் அறைக்குப் போகவும், சமையல் சாமான்களைப் பார்க்கவும் கூடப் பிடிக்கவில்லை. நிலைவாசலின் மேல் சாய்ந்தவாறு சரிந்து குன்றி, இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டாள்.

ஞாயிற்றுக்கிழமைகளில் ஸ்கூட்டர் சவாரியில் அவளும் ராமுவும் காலை நேரப் படம் பார்க்கப் போய்விடுவதுண்டு. மாமியார் குழந்தையைக் கவனித்துக் கொண்டுவிடுவார். அவர்கள் திரும்பும் வேளையில் சாப்பாடு தயாராக இருக்கும். சாப்பிட்டானதும் அவளும் ராமுவும் ஓய்வுக்குப் போய்விடுவார்கள். படத்தைப் பற்றிய சிறு விமரிசனம், கொஞ்சம் பேச்சு, ஒரு கொட்டுத் தூக்கம், இவ்வளவுக்கும் பொழுது இருக்கும்.

இப்பொழுது இந்த நேரத்தின் தனிமையும் மேலே விழுந்த பொறுப்புக்களும் ராமுவின் கோபத்திலும் உதாசீனத்திலும் பன்மடங்கு பெருகித் தோற்றம் அளித்தன. அன்று நடந்ததில் தவறு அவளுடையதுதான். ஆனால் ஏன் அவள் ராமுவின் கோபத்துக்கு எதிரொலியாக வார்த்தைகளைக் கொட்டினாள்? அவளால் ஏன் பொறுமையாக இருக்க முடியவில்லை? ஏன் விட்டுக் கொடுத்து, அநுசரித்துப் போக முடியவில்லை? எவ்வளவோ ஆதரவாக இருந்திருக்கக் கூடிய மாமியாரின் துணையும்கூட இந்தச் சுபாவத்தினால்தான் கைநழுவிப் போய்க் கொண்டிருக்கிறதோ?

அவளே சில சமயம் ராமுவிடம் 'சுருக்' கென்று ஏதாவது சொல்லிவிடுவாள். ஆனால் அவன் அதைப் பொருட்படுத்தியதில்லை. அவளைச் சமாதானம் செய்வது போலப் பின்புறமாக வந்து அணைத்துக் கொள்வான். உதட்டைப் பிடித்துக் கொண்டு சிரிப்புக் காண அலைவான். தவறு அவள்மீது இருந்தாலும் அதை அவனே ஏற்றுக் கொள்வான்.

அது நேற்று. அவை கடந்த காலத்தில் நழுவிய பொற் கனவுகள். அந்த நாட்கள் இனி வராது. ஏன்? ஏன் அவைகளை மீட்க முடியாது?

கண்ணில் நீர் பொங்க எழுந்து சென்று, தூங்கிக் கொண்டிருந்த முகத்தின் மேல் குனிந்தாள். குழந்தையின் மார்பில் விழுந்த நீர்த்த ஒரு சொட்டுத் துளியில் உடம்பு இலேசாக அசைந்து, மறுபடியும் உறக்கத்தில் அடங்கிற்று.

நாளைக்கு அவளுக்கும் ஓர் ஆண் மகவு பிறக்கலாம். ராமுவைப் போல் வளர்ந்து பெரியவன் ஆகலாம். ஒவ்வொரு நிலையிலும் அவளுடைய அன்பையும் சிறு தியாகத்தையும் ஏற்று வளரலாம். அப்புறம் ஒரு சூழ்நிலையில் அந்த அன்பையே சிறிதாக மதித்து அலட்சியப்படுத்தலாம்....



இந்த டூத்பிரஷின் அகன்ற குழாய் போன்ற கைப்பிடிக்குள் திரவ ரூபத்தில் பற்பசை இருக்கிறது. கைப்பிடியின் அடிவாரத்தில் உள்ள ஒரு திருகை இலேசாக முடுக்கினால் பற்பசை பிரஷின் நுனிக்கு வந்து முட்களை நனைக்கிறது. பல் தேய்த்தானதும் முனையைப் பேனாபோல் மூடிச் சட்டைப் பையில் செருகிக் கொள்ளலாம்!

ஆதாரம் : பாபுலர் மெகானிக்ஸ்.

தகவல் : ராஜலக்ஷ்மி.

---

சட்டென்று அவள் உடல் முழுதும் குலுங்கிற்று. அந்த அன்பை அலட்சியப்படுத்தாத, அந்தத் தாய்மையின் பரிவைப் போற்றி மதிக்கக் கற்றுக் கொள்ளும் மனப் பண்பில் தான் குடும்பத்தின் அன்றாட சிறு சிக்கல்களைப் பொறுமையாக ஏற்றுக் கொள்ளும் பக்குவம் ராமுவுக்கும் அவளுக்கும் கிடைக்குமோ? அன்புப் பேழையில் வைத்துப் பாதுகாக்க வேண்டிய உணர்ச்சியை, கவனக் குறைவாக உதறிவிட்ட பொறுப்பின்மைதான் அவர்களிடையே இப்படி எதிரெதிராகத் தெறித்து நிற்கிறதோ?

அந்த நிலையில் மௌனமாக வெதும்பும் தாய் உள்ளம்? மகனின் அன்பான ஒரு சொல்லுக்கும் அவன் குழந்தையின் உரிமையான நேசத்துக்கும் ஏங்கிப் பரிவுடன் காத்திருக்கும் பெற்றோரின் உள்ளம்?

நாளை... நாளை... அவளும் அந்த நிலையில் நிற்க நேருமோ? முதுகு குளிர்ந்து ஒரு சிலிர்ப்பு உதறிற்று.

கனத்த இமைகளோடு கண்ணயர்ந்தது நினைவில்லை. கண் விழித்தபோது மாலையின் பொன் ஒளி ஜன்னல் வழியே விழுந்து கொண்டிருந்தது. குழந்தை நீலா அவள் மார்பை அசைத்து எழுப்பிக் கொண்டிருந்தாள். நெஞ்சில் கனத்து நின்ற எண்ணச் சுமைகள் அந்தச் சிறுபொழுது ஓய்வில் இலேசாகி விட்டன போலத் தோன்றின.

எழுந்து முகம் கழுவிக்கொள்ளப் போனாள். அடுத்த தெரு முனையில் ஸ்கூட்டர் வரும் சத்தம் கேட்டது. ஆயிற்று. இரண்டொரு நிமிடங்களில் ராமு வந்து இறங்கிவிடுவான். உள்ளே வந்து இடுப்பில் கையை வைத்துக் கொண்டு நின்றுவிடுவான்.

அவனுடன் பேச அவள் தயாராகிவிட்டாள். அவனும் அதைப் போல் அவளிடம் பரிந்து ஒரு சொல் கூறத் தயாராகத்தான் வந்து கொண்டிருக்கிறான். வெய்யிலின் வெம்மையில் தோன்றிய சீற்றமும் கசப்பும் இந்தக் குளிர்ந்த வேளையில் அடங்கிவிட்டன.

அந்த நினைப்பும் கூட மறுபடி எழும் வகையில் அவள் ஏதும் சொல்ல மாட்டாள்.

சொற்களிடையே இலேசாக உணர்ச்சிகளைப் பகிர்ந்து கொள்ளும் வேளையில் அவன் சொல்லுவான்: ''அம்மாவை வரச் சொல்லி வற்புறுத்தி ஒரு கடிதம் எழுதுங்கள்...''

அதற்குப் பொருள் புரியாத விதமாய், சிறு வியப்புப் பொங்க அவள் திரும்பிப் பார்ப்பாள். அவள் முகத்தில் கேள்விக்குறி உயர்ந்து நிற்கும். அந்தக் கேள்விக்கு விடையை அப்படி உடனே உணர்த்திவிட முடியாது. அது ஒரு வாழ்க்கையின் தத்துவமாக, நெடுக, நாட்களின் ஓட்டத்தில்தான் இழைந்து நிற்க முடியும்.

கால் பூட்டைக் கழற்றிவிட்டு, ராமு துணியலமாரியை நோக்கி மெதுவாக அடியெடுத்து வைத்து வரும் சத்தம் கேட்டது.

---



# விவசாயத்தில் இன்று

## விவசாயத்துக்கு சேமிப்புக் கிணறு

மதுரை மாவட்டம் பரவை கிராமத்தில் வைகை நதிக் கால்வாய்ப் பாசனத்தில் எனக்குச் சொந்தமான ஒரு போக நஞ்சை நிலம் நாலு ஏக்கரும், புஞ்சை ஓர் ஏக்கரும் இருக்கின்றன. வைகை நதி கால்வாய்களில் போதிய தண்ணீர் வருவதில்லை. ஒரு போகம் நெல் வெற்றிகரமாகச் சாகுபடி செய்வது சில வருடங்களில் கஷ்டம். கிணறு வெட்டினால் ஒரு போக நஞ்சையில் இரு போகம் நெல் சாகுபடி செய்யலாமெனக் கருதி 10 அடி விட்டமும் 28 அடி ஆழமும் உள்ள ஒரு கிணறு வெட்டி அதில் 5 குதிரை சக்தி வாய்ந்த ஒரு மின்சார மோட்டாரும் இணைத்தேன். காலையில் அரை மணி நேரமும் மாலையில் அரை மணி நேரமும் மோட்டார் ஓடுவதற்குத்தான் கிணற்றில் தண்ணீர் இருந்தது. ஊற்றுக்கள் மிகக் குறைவு. விவசாய இஞ்சினீயரிடம் பவர் டிரில் (Power Drill) வாடகைக்கு வாங்கி 196 அடி ஆழமுள்ள போரிங் போட்டேன். ரூ. 6000 வரை செலவானது. தண்ணீர் வரவில்லை. 38 அடிக்குக் கீழே முழுதும் கடும் பாறையாய்ப் போய்விட்டது.

கிணற்றின் உள்ளே அடி மட்டத்திலிருந்து ஓர் அடிக்கு மேல் சுவரில் பக்கவாட்டில் கடப்பாறையால் 3 அங்குல விட்டமுள்ள ஒரு துவாரம் போட்டேன். 1 3/8 அங்குல கனமுள்ள 8 அடி நீளமுள்ள ஏழு இரும்புக் கம்பிகள் வாங்கி அவைகளின் இரு முனைகளிலும் மறை போட்டு ஒன்றோடொன்று கப்ளிங் மூலம் இணைக்க வகை செய்தேன். ஒரு கம்பியின் ஒரு நுனியில் போரிங் போடும் உளியைப் பொருத்தி அந்த 3 அங்குலத் துவாரத்தின் வழியே 6 பேர் கூலியாட்களை வைத்து, 3 கம்பிகளால் ஒரு ஸ்டாண்டு செய்து அதில் ஓர் உருளையை (Pulley) கட்டி, துளை போடும் கம்பியை அந்த உருளையின் மேல் வைத்து இழுத்து இழுத்துக் குத்தினேன். கம்பியில் ஒரு கைப்பிடியை இணைத்து அதையும் ஒவ்வொரு முறையும் திருகினோம். வெகு இலேசாக 52 அடி துவாரம் போடுவதற்கு இரண்டு நாட்கள் ஆனது. துவாரத்தைப் போட்டுக் கம்பிகளை வெளியே எடுத்தவுடன் துவாரத்தின் வழியே 2 அங்குல குழாயில் வரும் அளவு போத போதவென்று தண்ணீர் வந்து கிணற்றுக்குள் விழுந்தது. எனவே ஊக்கமாக அதைப் போல் மொத்தம் 10 துவாரங்கள் கிணற்றின் எல்லாப் பக்கங்களிலும் போட்டேன். எல்லாத் துவாரங்களிலும் தண்ணீர் வருகிறது. இப்பொழுது ஒரு போக நஞ்சையில் இரு போகம் சாகுபடி செய்கிறேன். இந்தக் கருவிகளைச் செய்வதற்கு ரூ. 220தான் செலவானது. பத்து துவாரங்கள் போடுவதற்கு மொத்தம் ரூ. 800தான் செலவானது. பக்கவாட்டில் கெட்டி சுக்கானாகவும் (Soft Rock) உளியால் உடைக்கக் கூடிய பாறையாகவும் இருந்தது. பக்கவாட்டில் கடும் பாறையாக (Hard Rock) இருந்தால் மனித சக்தியால் துவாரம் போட முடியாது. மனித சக்திக்குப் பதிலாக ஏர் கம்ப்ரெஸர் (Air Compressors) என்னும் இயந்திர சக்தியால் பக்கவாட்டில் சுமார் 80 அடிவரை துவாரம் போடலாம்.



தமிழ்நாடு அரசு ரெவின்யூ போர்டு மெம்பர் திரு கே. அனந்தபத்மநாபன், ஐ.ஏ.எஸ். அவர்கள் என்னுடைய கிணற்றில் துவாரம் போட்டிருப்பதையும் துவாரம் போடும் முறையையும், தண்ணீர் வருவதையும் நேரில் பார்த்துப் பாராட்டினார். இந்த முறையைக் கையாளும் விவசாயிகளுக்கு அரசாங்கம் கடன் கொடுக்க முன்வர வேண்டும்.

சேலம், எஸ். காளி, பி.ஏ.,









தாணு (மகாராஷ்டிரா) தேவிதயாள் கேபிள்ஸ் கம்பெனியின் டெக்னிகல் மானேஜர் ஸ்ரீ எஸ். ராகவன் அவர்கள் குமாரி செல்வி ஆர். ராஜேஸ்வரியின் பரதநாட்டிய அரங்கேற்றம் 18-1-70ல் மாதுங்கா, பம்பாய் போத்தார் கலா சாலை ஹாலில் சிறப்பாக நடந்தேறியது. இவர் கலைவாணி நாட்டிய திலகம், ஸ்ரீமதி ராஜீ நாராயணன் அவர்கள் நடத்தும் ''நிருத்திய கீதாஞ்சலியில்'' பயின்றார். பம்பாய் நகராண்மை டெபுடி கமிஷனர் ஸ்ரீ எஸ். எம். ஓர். ஸாஸ்திரி அவர்கள் தலைமை வகித்து ஆசீர்வதித்தார்.



## விஜிபி யால் உருவாக்கப்பட்ட தவணைத் திட்டம் ஏராளமான மக்களுக்கு உதவுகிறது.

### மேலும் மேலும் அதிகமான மக்கள்
### விஜிபியின் சுலபத் தவணைத் திட்டத்தால் பயனடைகிறார்கள்

எல்லோரும் சுலபமாகப் பொருள்கள் வாங்கும் வாய்ப்பு. தயாரிப்பாளர்களின் விலைக்கே தரும் தனிச்சிறப்பு. வசதிக்கேற்றபடி பணம் செலுத்தும் முறை. தேர்ந்தெடுத்து வாங்க ஏராளமான பொருள்கள். உத்திரவாதமுள்ள தரமான பொருள்கள். விற்பனைக்குப் பிறகும் திருப்தியளிக்கும் சேவை.

*இத்தனைக்கும் மேலாக வாடிக்கையாளர் பெறும் மன நிறைவு.*




**வி.ஜி. பன்னீர்தாஸ் & கோ.**

சைதாப்பேட்டை, சென்னை-15. போன்: 442332
கிளை: தி.நகர், சென்னை-17. போன்: 440246
புதிய ஷோ-ரூம்:
27, ரத்தன பஜார், மதராஸ்-3 போன்: 35213

NAS-12ZA

*இரண்டு லட்சத்துக்கு மேலான மக்களுக்கு சேவை புரியும் தனிச் சிறப்பு.*




# வருமான வரி பாக்கி

நாடோடி



சினிமா நட்சத்திரங்களில், யார் யார் எவ்வளவு வருமான வரி பாக்கி என்கிற விவரத்தைப் பத்திரிகைகளில் வெளியிடுவது என்று அரசாங்கம் ஒரு வழக்கம் வைத்திருக்கிறது. சமீபத்தில் அப்படி ஒரு ஜாபிதா வெளியானது. ஆனால் இதனால் அரசாங்கத்துக்கு என்ன லாபம் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை.

மந்திரி ஒருவர், ஞாபகமறதியினால் வரி கொடாமல் இருந்து விட்டார் என்கிற விவரம் வெளியான போது, அதைக் கண்டித்துப் பத்திரிகைகளுக்குக் காரசாரமாகக் கடிதங்கள் எழுதிய பொதுமக்கள், இப்பொழுது வருமான வரி பாக்கி வைத்திருக்கும் சினிமா நட்சத்திரங்களைத் தாக்கி ஆசிரியர்களுக்குக் கடிதங்கள் எழுதுவார்கள் என்று அரசாங்கம் எதிர்பார்த்தால் ஏமாற வேண்டியதுதான்.

ஏனென்றால், வருமான வரி பாக்கி வைப்பது என்பது எல்லாராலும் முடிகிற காரியம் அல்ல. இந்தக் காரியத்தைச் செய்வதற்கு மூன்று முக்கிய விஷயங்கள் தேவை. முதலாவதாக, நிறைய வருமானம் பண்ணத் தெரிந்திருக்க வேண்டும். இரண்டாவதாக, அந்த வருமானத்தின் ஒரு பகுதியை நாம் சர்க்காருக்குத் தெரிவிக்க, அவர்கள் அதற்கு வரி விதிக்க வேண்டும். மூன்றாவதாக, அந்த வரியை நாம் செலுத்தாமல் இருக்க வேண்டும்.

ஆகவே, பொதுமக்கள் எல்லாராலுமே இந்த மூன்று காரியங்களையும், அதிலும் குறிப்பாக, முதல் காரியத்தைச் செய்ய முடியாதாகையால், அவர்கள் இப்படிச் செய்தவர்களை அசகாய சூரர்கள் என்று நினைத்துப் பெருமைப்படுவார்களே யொழிய அவர்களை இழிவாக நினைக்க மாட்டார்கள்.

அதே மாதிரி, சினிமா நட்சத்திரங்களும் இது குறித்துக் கவலைப்படுவார்கள் என்று நினைத்தால் அதைப் போல் அசட்டுத்தனம் வேறு கிடையாது.

அவர்கள் எதற்காகக் கவலைப்படுகிறார்கள்? எந்த வகையிலும் தங்களுக்கு விளம்பரம் கிடைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று விரும்பும் அவர்கள் இதையும் ஒரு செலவில்லாத விளம்பரமாகத்தான் கொள்வார்கள். அதிலும் அதிக பாக்கி உள்ளவர்கள், இதை மிக அதிகப் பெரிய விளம்பரமாக எடுத்துக் கொள்வார்கள்.

சினிமா நட்சத்திரங்களுக்கிடையே, யார் பெரியவர், யார் சின்னவர், யாருக்கு அதிகப் பணம் கொடுக்க வேண்டும், யாருக்குக் குறைவாகப் பணம் கொடுத்தால் போதும் என்றெல்லாம் நிர்ணயிக்க, இந்த வருமான வரி பாக்கி அளவுகோலை விட, வேறு சிறந்த அளவுகோல் எங்கே கிடைக்கப் போகிறது! உதாரணமாக ஒருவர் பன்னிரண்டு லட்சம் ரூபாய் வருமான வரி பாக்கி என்றால், அவர் ஐந்து லட்சம் ரூபாய் வருமான வரி பாக்கி வைத்திருப்பவரைவிட அதிக ரேட்டு வாங்குகிறவர் என்று படாதிபதிகள் சொல்லாமலே தெரிந்து கொள்வார்கள்.

இந்த விளம்பரத்தைச் சினிமா நட்சத்திரங்கள் இன்னொரு வகையிலும் பயன்படுத்திக் கொள்ளலாம். நன்கொடை வசூலிக்க வருகிறவர்களைத் துரட்டிக் கழிக்க இது பயன்படுமே!

ஆனால் இந்த விளம்பரங்களினால், அரசாங்கம் வருமான வரி பாக்கி வைக்காத சினிமா நட்சத்திரங்களுக்கு ஒரு பெரிய தீங்கு இழைக்கிறது என்று கூற விரும்புகிறேன். ஒரு நடிகர் பன்னிரண்டு லட்சம் பாக்கி வைத்திருந்த இடத்தில், இன்னொரு நடிகர் பதினைந்து லட்சத்தை வரியாகவே செலுத்தி யிருக்கலாம். ஆகவே அந்தப் பன்னிரண்டு லட்ச பாக்கிக்காரரைவிட, பதினைந்து லட்சம் செலுத்தியவர்தான் அதிக ரேட் வாங்குகிறவர் என்று பொதுமக்கள் தெரிந்து கொள்வதற்காகவாவது, அவர்களின் பெயர்கள் பிரசுரிக்கப்பட வேண்டும். இல்லாவிட்டால் பெயர் விளம்பரத்துக்கு ஆசைப்பட்டு இதுவரை ஒழுங்காக வரி செலுத்தி வந்தவர்களும், வரி பாக்கி வைக்க ஆரம்பித்துவிடக் கூடும்.

ஆனால் இந்த வருமான வரி பாக்கி விஷயமாக, ஏழைகளுக்கும், பணக்காரர்களுக்கு மிடையே தாரதம்மியம் காட்டப்படுகிறதே, அது நம் சோஷலிச சமூக வளர்ச்சிக்கே விரோதமானது என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

என்னைப் போன்ற எத்தனையோ பேர், நூறும் இருநூறும் வருமான வரி பாக்கி வைத்திருக்கிறோம். அப்படியிருக்க, எங்கள் பெயர்களையும் வெளியிட்டு, எங்களையும் சற்றுப் பிரபலப்படுத்தினால் என்ன! சோஷலிச சமுதாயத்தில்கூடப் பணக்காரர்கள் வருமான வரி பாக்கி வைத்தால்தான் பெருமை, ஏழைகள் வருமான வரி பாக்கி வைத்தால் பெருமை இல்லையா? ஆகவே, இது விஷயமாக, அரசாங்கம் பாரபட்சம் காட்டுகிறது என்று சுப்ரீம் கோர்ட்டில் 'ரிட்' போட இடமிருக்கிறது.



# நிஜமும் நினைப்பும்

உமாகுருமூர்த்தி

"குழந்தைகளா இவை?...."

ஜெயத்துக்கு எரிச்சலும் துயரமும் சூழ்ந்து கொண்டு வந்தன; அலுப்பும் சலிப்பும் மேலிட்டன.

'கோட்டான்கள்! அவளுக்கென்று எங்கிருந்துதான் வந்து வாய்த்தனவோ!'

"....அம்மா! அண்ணாவைப் பாரேன்! எம் புஸ்தகத்தைக் கிழிச்சுட்டான்!...."

அபர்ணாவின் கூக்குரல் அவள் செவியில் நாராசமாய் வந்து விழுந்தது.

"நீ மட்டும் என் சிலேட்டை உடைக்கலா மோடி... எருமை மாடு...!"

"நானுடா உடைச்சேன், கழுதை! புஸ்ணியத்துக்கு உன் பையை எடுத்து ஆணியிலே மாட்டப் போனேன். பை கீழே விழுந்து பலகை நொறுங்கிப் போச்சு... அதுக்கு நானு பழி? நீ ஏன் என்னே மாட்டச் சொன்னே?"

"சொன்னேன். அப்படித்தான் இன்னும் சொல்லுவேன்... உடைஞ்ச பலகையை ஒட்ட வைடி... ஒட்டச் சிவிங்கி!

"சொல்லு... சொல்லு... கரைக்காய்க்கு உப்பில்லேன்னு.... வவ்வ... வவ்வே...."

"என்ன சொல்லறே?...அழகா காட்டறே, பிசாசு!...."

கையை ஓங்கிக் கொண்டு அபர்ணாவின் மீது பாய்ந்தான் சதிஷ். அவள் என்ன இவனுக்குச் சளைத்தவளா? காலால் அவனுக்கு 'ஆராதனை' செய்தாள்.

"எட்டி உதைக்கிறியா கழுதை!...பொட்டைச் சனியனுக்கு இத்தனை திமிரா?"

அவன் அவள் முதுகில் 'தும் தும்' என்று குத்து கையில் ஜெயம் கரண்டியும் கையுமாய்ச் சமையலறையிலிருந்து வெளிப் போந்தாள். கரண்டியைக் கீழே வைத்து விட்டு, குழந்தைகளின் 'குஸ்தி'ச் சண்டையை ஒருவிநாடி கவனித்தாள்.

"....டேய், சதிஷ்!... அடி, அபர்ணா!"

அம்மாவின் அதட்டல் அவர்கள் சண்டையை நிறுத்தி விடவில்லை; சற்று மட்டுப்படுத்திற்று. அரைகுறையாகப் பற்றிக் கொண்ட விறகில் அரைப் புட்டி மண்ணெண்ணெயைக் கவிழ்த்தது போல ஜெயத்தின் கோபம் கொழுந்து விட்டுக் கொண்டு எழும்பிற்று.

"...சனியன்களா!.... சதா சர்வதா இதே ரோதனை தானு? காலங்கார்த்தாலே பாடம், படிப்பு என்று அவரவர் வேலையைக் கவனித்துக் கொண்டு போவதற் இல்லே? தரித்திரங்கள்...." என்று அர்ச்சித்தபடியே இருவருக்கும் செம்மையாகப் பூசைக் காப்பு செய்து விட்டு, அவசரத்தில் அடுப்பிலேயே வைத்துவிட்டிருந்த பாலைக் கவனிக்க மீண்டும் அடுப்பங் கரைக்குச் சென்றாள்.

அங்கே.....

பால் பொங்கிக் கொதித்துக் கொண்டிருந்தது. பின்னே, அவர்கள் வீட்டுப் பால் பொங்கி வழியவா செய்யும்? ஆழாக்கு முப்பது பைசாக் கொடுத்து வாங்கினால், பால் பொங்கும், வழியும், கத்தியால் பிளப்பது போல் கட்டித் தயிராய் உறையும். அவர்கள் கொடுக்கும் இருபது பைசாவுக்கு இதுவே அதிகம் என்கிறான் பால்காரன். இதற்கே மாதம் முப்பது ரூபாய்க்கு மேலே ஆகிறது. இதையே சமாளிக்க முடியவில்லை.

பாலை இறக்கிவிட்டு சயச் செம்பை அடுப்பில் ஏற்றினாள் ஜெயம். 'ட்யூஷனை' முடித்து விட்டு அரை மணியில் அவர் வந்து விடுவார்; வந்து கால் மணிக்குள் காலில் கஞ்சியைக் கொட்டிக் கொண்டு தான் புறப்படுவார். அதற்குள் எல்லாம் தயாராக வேண்டும்.

பெருங்காயத்தைக் கிண்ணி ரசத்தில் போட்டு விட்டு, கூடத்துப் பக்கம் வந்தாள் ஜெயம். சுவரிலிருந்த பெரிய நிலைக் கண்ணாடியின் பிரதிபலித்த அவள் முகம், குளித்து வந்த அவள் நெற்றிக்கு இட்டுக் கொள்ளவில்லை

என்பதை அறிவித்தது. குங்குமத்தைக் குழைத்துத் திலகம் இட்டுக் கொள்கையில், திடீரென்று வேதனை அவள் நெஞ்சில் இறங்கியது.

பூரிப்பு தரும் பொலிவுமிக்க அவள் தோற்றமா இது! எப்படி இருந்தவள் எப்படி ஆகி விட்டாள்? கல்யாணம் ஆகிக் குழந்தைகளும் பிறந்து விட்டால், பெண்களின் இளமையும், மகிழ்வும் கடலில் கரைத்த காயமாகத்தான் போய் விடுகின்றன!.... சம்சார சாகரம் என்று தெரியாமலா சொன்னார்கள்?

கணப்பொழுது கண்ணாடியின் முன் தாமதிப்பதற்குள் மூன்றாமவன் கண்ணன் தண்ணீர்த் தொட்டிக்குள் இறங்கித் 'தப்பளம்' போட்டுக் கொண்டிருப்பதையோ, சின்னக் குட்டி சோபனா தன் அப்பாவின் அறைக்கு ஓடியதையோ அவள் கவனிக்கவில்லை!

சிறு குழந்தை என்பது வீட்டுக்கு ரேடியோ போல. வீட்டில் இந்தப் பகுதியில் நடக்கும் செய்தியை, அடுத்த பகுதிக்கு அரை நொடியில் அறிவிக்க அது பயன்படுகிறது.

"....அப்பா! அண்ணாவையும் அக்காவையும் அம்மா அடிச்சா....!" என்று குழந்தை சோபனா தன் தந்தையிடம் செய்தியை அறிவித்தாள்.

"அப்படியா? அண்ணா என்ன செய்தான்?"

'டியூஷன்' பையன்களுக்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு உட்புறம் வந்தார் நாதன்.

"இந்தச் சோபனாவுக்கு முகம் துடைத்து நல்ல கவுனைப் போடக் கூடாது ஜெயம்?... தலை வாரிப் பின்னுவதே இல்லையா இவளுக்கு? பரட்டைத் தலையும் ஒழுகும் மூக்குமாய் அங்கே பையன்கள் எதிரே வந்து நிற்கிறாள்..... அடுத்தாற்போல் பக்கத்து வீட்டுக் குழந்தையைப் பார்....!"

ஜெயத்தின் மீது சொல்லம்புகளைத் தொடுத்துக் கொண்டே அங்கே வந்த அவரைக் கண்டதும் சிறு குழந்தையைப் போல் ஜெயத்துக்குக் கண்களில் அழுகை மின்னியது.

அவள் குழந்தைகளுக்குப் பெயரில் மட்டும் தானா அழகு இருக்கிறது?

காலையில் எழுந்ததும் கைக் குழந்தை கத்துவதைக் கூடப் பொருட்படுத்தாமல், முதல் வேலையாகச் சோபனாவுக்கு வெந்நீரில் குளிப்பாட்டி, அழகாய்த் தலைவாரிப் பின்னி, பௌடர் பூசி, மை, சாந்து இட்டு, நல்ல கவுனையும் அணிவித்திருந்தாள் ஜெயம்.

அத்தனையையும் கலைத்துக் கொண்டு, ஆடையை அழுக்குச் செய்து கொண்டு...

அப்பாவின் எதிரே அலங்கோலமாய்ப் போய் நிற்கிறது அது!

சோபனாவைப் 'பளார்பளார்' என்று நாலு வைக்க வேண்டும் என்று கை பரபரத்தது அவளுக்கு. அவருக்குப் பயந்து, பொங்கி வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டாள்.

அதற்குள் —

ஈர உடலுடன் அங்கே வந்த கண்ணனைக் கண்டதும் எல்லை மீறியிருந்த பொறுமையையும் கோபத்தையும் அடக்கிக் கொள்ள அவள் வெகுவாகப் பாடுபட வேண்டியதாயிற்று. புடவைத் தலைப்பால் கண்ணனின் பூவுடலைத் துடைக்கையில், அவள் பார்வை கணவருடைய முகத்தில் படிந்தது.

அவருக்கு எப்போதும் குழந்தைகளைத் திட்டுவதும், அடிப்பதும் பிடிக்காது. அதிகாரத்தால் அடக்க முயலுவதைவிட அன்பால் வழிக்குக் கொண்டு வர வேண்டும், கொண்டு வர முடியும் என்பது அவர் கொள்கை. ஆனால் நடைமுறையில் அது எங்கே சாத்தியமாகும்? அடி உதவுவதுபோல் அண்ணன் தம்பிகூட உதவுவது இல்லையே?

'...பக்கத்து வீட்டுக் குழந்தையைப் பார்!'

அவருடைய சொற்கள் அவள் உணர்ச்சியை சாட்டைகளாய்த் துளைத்தன.

கொஞ்ச நாட்களுக்குமுன்பு தான் அடுத்த வீட்டுக்கு அவர்கள் குடி வந்திருந்தார்கள். கணவன், மனைவி, குழந்தை என்று கச்சிதமான குடும்பம். இரண்டு குழந்தைகள். மூத்த பையன் ஊரில் படிக்கிறானாம். இரண்டாவது பெண் குழந்தை. தம்பதி இருவருமே பார்க்கச் சுமாராய்த்தான் இருப்பார்கள். ஆனால் அந்தக் குழந்தை ?

ஓ! அதுதான் எவ்வளவு அழகு? துடைத்து விட்டாற் போல், கவர்ச்சிப் பதுமையாய்.... அள்ளி அணைத்துக் கொள்ள வேண்டும் போல் ஆவலைத் தூண்டும் அற்புத அழகு.... உள்ளம் கவரும் உன்னதச் செல்வம்....

அலுங்காமல், ஆடாமல் அசையாமல் அப்படியே திண்ணையில் அமர்ந்திருக்கும்.

வயசு நாலு இருக்கும். கொடிக் கருணாய்ப் படர்ந்து கிடக்கும் கூந்தலை, ரோஜா நிற நைலக்ஸ் நாடாவினால் முடிந்து அகன்று விரிந்த சின்னஞ் சிறு விழிகளில் அஞ்சனம் இட்டுப் பளிச்சென்ற பட்டு உடலுக்கேற்ப மெல்லிய சில்க் சொக்காய் அணிவித்து....

மாலை வேளைகளில் திண்ணையில் உட்கார வைப்பாள் அதன் தாயார்.

அந்தக் குழந்தை.....

இப்புறம் அப்புறம் அசைந்து....

கீழே புழுதியில் இறங்கி... ஓடியாடி.... ஊஹூம்.. கனகப் பதுமையாய்ப் பார்ப்பவர் கண்களை நிறைத்துக் கொண்டு அப்படியே அங்கே உட்கார்ந்திருப்பாள் குழந்தை. தன் அப்பாவுக்கு 'டாடா' சொல்லுவதுகூடத் திண்ணையிலிருந்தபடியேதான். தினமும், அதன் தந்தை ஆபீஸிலிருந்து திரும்பியதும் கணவன் மனைவி இருவரும் குழந்தையுடன் உலாவப் போகிறார்கள்.

குடும்பம், குழந்தை என்றால் இப்படியல்லவா கட்டுப்பாடுடன் இருக்க வேண்டும்!

"சரி, சரி, நேரமாயிடுத்து. நான் வரேன். குழந்தைகள் பத்திரம்...."

அவர் கருமமே கண்ணாகப் பள்ளிக்குப் புறப்பட்டு விட்டார், வழக்கம் போல்.

அன்று....

எதிர்பாராத விதமாக அடுத்த வீட்டுப் பெண் ஜெயத்தின் வீட்டுக்கு வந்தாள். அன்புடன் அவளை வரவேற்ற ஜெயம் குழந்தையைப் பற்றி விசாரித்தாள்.

"....நானே ஒரு நாள் உங்க வீட்டுக்கு வரணும்னு இருந்தேன்.... உங்க குழந்தையைத் தூக்கிக் கொஞ்ச ஆவல்...." என்றாள். சட்டென்று அடுத்த வீட்டுப் பெண்ணின் முகத்தில் வேதனை ஆடியது.

"...குழந்தைக்காகத்தானம்மா நானே இப்போ இங்கே வந்தேன். அவளுக்குத் திடீரென்று ரொம்பவும் ஜுரம் அடிக்கிறது. சோதனையாய் அவரும் 'காம்ப்' போயிருக்கார். தாய்ப் பாலில் துணியை நனைத்து நெற்றியில் போட்டால் நல்லது என்கிறாங்க... உங்களிடம் கொஞ்சம்...."

"அதற்கென்ன தருகிறேன். சற்றே உட்காருங்கள்...." என்ற ஜெயம் சற்றைக்கெல்லாம் பால் நிரம்பிய பாலாடையை அவளிடம் தந்துவிட்டு, "குழந்தையை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்குங்க... ஏதாவது உதவி வேணுமானாலும் தயங்காமல் என்னிடம் கேட்கலாம்..." என்று கூறியபோது விழிகளில் நீர் மல்க விடைபெற்றுக் கொண்டாள் அவள்.

மறு நாள்

குழந்தையைப் பார்த்து வரும் சாக்கில் ஜெயம் அடுத்த வீட்டுக்குப் போகிறாள்.

வெய்யிலில் துவண்ட மலராய் ஒரே நாளில் எப்படி வாடிவிட்டது குழந்தை!

ஜுரம் சற்றே மட்டுப்பட்டிருந்தது. ஆனால் மூச்சு மட்டும் அதற்கு 'தஸ்ஸ', புஸ்ஸ' என்று இரைத்துக் கொண்டிருந்தது.

ஜெயம் கலவரத்துடன் குழந்தையின் தாயாரை நோக்கினாள். அவள் ஜெயத்தைத் தனியே அழைத்துப் போனாள். குழந்தைக்கு எதிரே பேச அவள் விரும்பவில்லை போலும்.

"....இவளுக்கு இப்படித்தான் அடிக்கடி இரைப்பும் ஜுரமும் வர்றது வழக்கம். பிறக்கும்போதே 'ப்ளூ பேபி'யாகத்தான் பிறந்தாள்; இதயத்தில் ஏதோ கோளாறு. வயசு அஞ்சாகப் போறது..... ஓடியாடித் திரியற பருவம். கொஞ்சம் வேகமாய் நடந்தால் மூச்சு வாங்கறது.... தினமும் சாயங்கால நேரத்திலே டாக்டர் கிட்டத்தான் அழைச்சுக்கிட்டுப் போறோம்...."

நெஞ்சின் மீது பெரிய பனிக் குன்றை வைத்தாற் போலிருந்தது ஜெயத்துக்கு.

"...துக்கப்படவே பிறந்தவ அம்மா நான்! கண்மணிகளைப் போல் இரண்டைப் பெற்றெடுத்தும், வீட்டில் கலகலப்பு இல்லே. மூத்த பையனுக்குப் பத்து வயசாகிறது. இளம் பிள்ளை வாதத்தால், கால் நடக்க முடியாம, அடையாறு 'ஆர்த்தோபீடியக் சென்டர்' ஆஸ்பத்திரியிலே சேர்த்திருக்கிறோம்..."

அவள் குலுங்கி அழுதாள்; ஆதரவாய் அவளை அணைத்துக் கொண்டாள் ஜெயம்.

எதிரே சுவரில் மாட்டப்பட்டிருந்த புகைப் படத்தில் சிரிப்பு மலர்ந்த முகத்துடன் கண் கவரும் வனப்புடன் இரு குழந்தைகளையும் ஆளுக்கொன்றாக மடியில் இருத்திக் கொண்டு— அவர்கள் இருவரும் எவ்வளவு நிறைவுடன் இருக்கிறார்கள்! எவ்வளவு துன்பத்தை எத்தனை அமைதியாகத் தாங்கிக் கொள்கிறார்கள். நாம் என்னவோ நம் குழந்தைகள் படுத்துவதாய்க் குறைப்பட்டுக் கொள்கிறோமே!

ஜெயத்தின் வீட்டிலிருந்து 'ரேடியோ' அறிவித்தது. "அம்மா! கண்ணன் தண்ணியைக் கொட்டறான்...."

அடுத்த வீட்டுப் பெண்ணுக்குத் தைரியம் சொன்ன ஜெயம் அலுப்போ சலிப்போ இன்றி நிறைந்த மனத்துடன் தன் வீட்டுக்கு ஓடுகிறாள்.

# படித்துப் பாருங்கள்

## அண்ணல் காந்தி மலராஞ்சலி

**கா**ந்திஜியைப் பற்றிப் பாரதத்தின் மிகப் பெரிய அரசியல்வாதிகள், சிந்தனைச் சிற்பிகள் தலைவர்கள், கவிஞர்கள், பேச்சாளர்கள், பெரியோர்கள், செயல் வீரர்கள் எல்லாரும் இம்மலரிலே பல்வேறு கோணங்களில் நின்று பார்த்து எழுதிய கட்டுரைகள் இடம் பெற்றிருக்கின்றன. கூறியது கூறல், மிகைபடக் கூறல் என்ற குற்றங்களுக்கு அப்பாற்பட்டதாக ஒவ்வொரு கட்டுரையையும் தேர்ந்தெடுத்துத் தொகுத்துள்ள முறையைப் பாராட்ட வேண்டும். காந்திஜியின் ஆசிரம வாழ்க்கையின் கட்டுப்பாட்டை, ஆசிரமத்தில் இருபத்திநான்கு மணி நேரத்தில் நடைபெறும் நிகழ்ச்சிகளை அநுபவ பூர்வமாக விளக்குகிறது ஒரு கட்டுரை. காந்திஜியோடு இருந்து பழகி, அவரோடு விவாதிக்கும் வாய்ப்புப் பெற்ற பல பெரியோர்களின் வர்ணனைகள் பல கட்டுரைகளாக விளங்குகின்றன. காந்திஜி படித்த புத்தகங்களின் பட்டியல் இருக்கிறது இதிலே. அவருடைய பொன்மொழிகள் ஆங்காங்கே பதிக்கப்பட்டிருக்கின்றன. தமிழ் நாட்டில் உள்ள காந்தி ஆசிரமங்களின் விவரம் தரப்பட்டிருக்கிறது. அவரது வாழ்க்கையை வரைபடங்களாகவும் விளக்கியிருக்கிறார்கள். இம்மலர் முழுவதும் கட்டுரைகளின் இடையே சித்திரங்களுக்கு இடமளித்து மலரின் ஒவ்வொரு பக்கத்தையும் படிப்பதோடு மட்டுமல்லாமல் பார்க்கும்படியும் செய்திருக்கிறார்கள். ஆங்கிலக் கட்டுரைகள் முதற் பகுதியிலும் ஏராளமான தமிழ்க் கட்டுரைகளும் கவிதைகளும் அதை அடுத்தும் உள்ளன. படிக்கும் விஷயங்களுக்கு இடையே நின்று கண்ணை உறுத்தாதபடி விளம்பரங்களை ஒட்டுமொத்தமாகக் கடைசியில் அமைத்துக் கொடுத்திருப்பது பாராட்டப்பட வேண்டிய விஷயம். இம்மலரில் அண்ணலைப் பற்றி மொத்தம் 152 விஷயங்கள் இடம் பெற்றிருக்கின்றன.

பெரிய அளவில், உயர்ந்த காகிதத்தில், சிறப்பான முறையில் அச்சிட்டு, உறுதியாகப் பைண்டு செய்து 370 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ள இம்மலரின் விலை ரூ. 10 என்பதைக் கொஞ்சம் அதிகம் என்று நினைப்பவர்கள் மலரை ஒரு முறை பிரித்துப் பார்த்தபின் அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்வார்கள் என்பது திண்ணம்.

தொகுப்பாசிரியர்களான திரு ஏ. திருநாவுக்கரசும், திரு எஸ். நடராஜனும் (நஜன்) அண்ணல் காந்திஜிக்குத் தாங்கள் அளித்துள்ள இக்காணிக்கைக்காக சங்கோசமின்றிப் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். நாமும் பாராட்டுகிறோம்.

வெளியீடு: வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை 17.

# வாழ்வில் இன்பம்
# பன்மடங்காகும்
## உமக்கென ஒரு ஜெம் இருந்தால்

வாங்கிக்கொள்ளுங்கள் ஒரு ஜெம்...பேரகமயமான ஒரு புத்துலகம் உங்களை வரவேற்கும்...கடை கண்ணிக்குப் பல நடைகள் போக வேண்டியிராது...உணவுகள் அதிக நேரம் புதுமையோடு இருக்கும்...திடீர் விருந்தாளிகளைக் கண்டு திடுக்கிட வேண்டியதில்லை...அக்கம் பக்கத்தோரின் மெச்சும் விழிகள் உங்கள் மீது படரும் (பொறாமைக் கண்களும் கூட!) ஆம், உமது இல்லத்திற்கென ஒரு ஜெம் இருந்தால் இன்பம் பன்மடங்காகும். இழைவான எழிலும் இடவசதியும் மிகுந்தது ஜெம். சேவைத்திறனும் சிக்கனமும் மிக்கது. சுருங்கக் கூறின், நல்ல ரெப்ரிஜிரேட்டருக்கு உள்ள எல்லாப் பண்புகளும் அதற்கு உண்டு. மேலும் உண்டு!

எடுப்பான இதர ஜெம் சிறப்புகள்:

▼ ரெப்ரிஜிரேட்டர்-டீப் ஃப்ரீஸர் இரண்டுமிணைந்தது ▼ தானாக இறுக மூடிக்கொள்ளும் புதிய ஆட்டோமேட்டிக் காந்தக் கதவு. ▼ குறைந்த மின் செலவு. ▼ சேமிப்புக்கென அதிக அதிக இடப் பரப்பு ▼ ஐஸ், ஐஸ் க்ரீம் இரண்டையும் அதிவிரைவில் உருவாக்கும். ▼ ஓசையற்ற இயக்கம் ▼ உத்தரவாதமாகக் கட்டிறுக்கமாக மூடிய யூனிட்.

286 லிட்டர் மற்றும் 175 லிட்டர் கொள்ளளவுகளிலே கிடைக்கிறது. விலைவிகித ஒப்பந்தப்படி D.G.S. & D.யிடமும் கிடைக்கிறது.






விற்பனைக்கு விடுப்போர்:
ஜெனரல் எக்விப்மெண்ட் மர்செண்ட்ஸ் லிட்.
பம்பாய் • கல்கத்தா • சென்னை • அகமதாபாத்
• பெங்களூர் • சண்டிகார் • எர்ணாகுளம்-கொச்சின்
• ஜெய்ப்பூர் • லக்னௌ • செகந்தராபாத்
ரிஜி. ஆபீஸ் N-75 கன்னாட் ஸர்க்கஸ், புது டெல்லி1

AIYARS GEM 35 TM



# வட்ட மேஜை

பெட்டிக்குள் உள்ள கடிதம் ரூ. 15 பரிசு பெறுகிறது.

---

திருச்சியில் அண்மையில் நடந்து முடிந்த திராவிட முன்னேற்றக் கழக மகாநாட்டில் ஒரு புதிய கோஷம் உருவாகி யிருக்கிறது.

'வன்முறை மூலமாக இல்லாமல் வறுமையை எதிர்த்துப் போராடுவோம்' என்பதே அந்தப் புதிய கோஷம். தி.மு.க.வின் இந்தக் கோஷத்தைக் கரகோஷத்துடன் மனமுவந்து வரவேற்கிறோம். வன்முறை இல்லாவிட்டால் வறுமையை அகற்ற முடியாது என்ற தவறான பிரசாரத்தை மக்களிடையே கம்யூனிஸ்டுகள் பரப்பி வருவதை நாம் அறிவோம். மக்களில் ஒருசாராரும் இந்தப் பொய்ப் பிரசாரத்தில் மயங்கி விடுகின்றனர்.

இத்தகைய நல்ல கோஷத்தை உருவாக்கிய தி.மு.க.வினர் செய்ய வேண்டிய முக்கியமான ஒரு காரியம் உண்டு. இந்தக் கோஷத்தை உண்மையாகப் பின்பற்றுகிறவர்கள் தாங்கள் என்பதை மக்கள் நம்புமாறு அவர்கள் செய்ய வேண்டுமானால் வன்முறைதான் எந்தக் கஷ்டத்துக்கும் நிவாரணி என்று பிரசாரம் செய்வதுடன் அதை நடைமுறையிலும் அனுஷ்டித்து வரும் கம்யூனிஸ்ட் உறவை அவர்கள் கத்தரித்துக் கொண்டுவிட வேண்டும். அத்துடன் அதை வெளிப்படையாக அறிவித்து விடவும் வேண்டும்.

சென்னை—56
24—2—70

வி. அமிர்தவல்லி

வட்டமேஜைப் பகுதியில் "அதிசய நெல் ஐ. ஆர். எட்டு பற்றி நண்பர் ஒருவர் எழுதியிருந்த கடிதம் கண்டு திடுக்கிட்டேன்.

ஐ. ஆர். எட்டு நெல் பற்றித் தவறான கருத்து மக்களிடையே இன்னும் நிலவி வருகிறது என்பதற்கு மேற்படி கடிதம் ஓர் எடுத்துக்காட்டாகும். ஐ. ஆர். எட்டு நெல் சாப்பிடுவதால் எந்தவிதமான கெடுதலும் வருவதில்லை. யாரோ சில வியாபாரிகள் தவறான முறையில் கிளப்பிவிட்ட பீதி அது.

என் குடும்பத்தில் எட்டுப் பேர்கள் இருக்கின்றனர். குழந்தைகள் உள்பட யாவரும் ஐ. ஆர். எட்டு நெல்தான் வீட்டில் பயன்படுத்துகிறோம். எந்தவிதமான தப்பான எண்ணம் உண்டாகக்கூடிய அசம்பாவிதமும் நடைபெறவில்லை.

வெம்பாக்கம் ஊராட்சி ஒன்றியத்தைச் சேர்ந்த கிராமங்களில் பெருமளவில் ஐ.ஆர். எட்டு நெல் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறது. நாட்டேரி தொகுதியில் மட்டும் ஆயிரக்கணக்கான ஏக்கர்கள் சாகுபடி ஆகி இருக்கிறது. செலவு சற்று அதிகம் ஆனாலும் கூட, இலாபம் அதிகம் வருகிறது என்ற திருப்தி விவசாயிகளுக்கு ஏற்படுகிறது.

வெம்பாக்கம்
2—3—70

கானதாசன்

---

ஒன்றன் பின் ஒன்றாகப் பல மாநிலங்கள் லாட்டரிச் சீட்டு என்னும் சூதாட்டத்தை நடத்தி மக்கள் மதியைக் கெடுத்து, பணத்தை மறைமுகமாகப் பெற்றுக் கொண்டு மக்களை ஏமாற்றும் இன்றைய நிலையில் தனிப்பட்ட நபர்களும் இந்தக் கைங்கரியத்தில் ஈடுபட்டுத் தங்களால் இயன்ற அளவு மக்களிடமிருந்து கொள்ளையடிக்கிறார்கள்.

அதுதான் கூட்டணி முறை. லாட்டரி சீட்டுக்கொரு கூட்டணி டிக்கட். லாட்டரிச் சீட்டு போலவே இதற்கும் குரூப் எண், மாகாணப் பெயர் எல்லாம் உண்டு. சந்தா தலா ஒரு ரூபாய். பங்குதாரர்கள் இருபத்தைந்து நபர்கள். வாங்கும் சீட்டு இருபது. பரிசு விழுந்தால் கமிஷன் தொகையில் ஐந்து சத விதம் கழித்து மீதம் வழங்கப்படுமாம்.

இதன்படி ஒரு டிக்கட்டின் விலை ரூ. 1.25. அரசாங்கம் இந்தச் சீட்டைத் 90 பைசாவுக்கு இவர்களிடம் விற்க இவர்களோ 1.25க்குக் கூட்டணி என்ற பெயரில் விற்றுப் பரிசைப் பங்கு போடுவதாக ஆசை காட்டி நடுவே 35 பைசா லாபம் அடிக்கின்றனர். மேலும் பரிசிலும் ஐந்து சதவிகிதம் கொள்ளையடிக்கின்றனர். இவர்களுக்குப் பரிசின் தொகையில் தனியே பத்து சத விகிதம் கொடுக்கிறது அரசாங்கம்.

அரசாங்கம் வசூலிக்கும் 90 பைசாவும் மக்கள் நன்மைக்காகச் செலவிடப்படுகின்றன என்ற வாதத்தை ஒப்புக்கொள்ளும் சமயம் இந்தக் கிளைச் சூதாட்டத்தின் மூலம் தனிப்பட்ட நபர்கள் கொள்ளையடிக்கும்பணம் எந்த மக்களுக்குப் பயன்படுகிறது?

இது மாதிரி லாட்டரிச் சீட்டு, கூட்டணிச் சீட்டு என்று கிளைவிட்டுக் கொண்டு போவதால் தமிழ் நாட்டில் சூதாட்ட உணர்ச்சிதான் பெருகுகிறது; உழைப்பும் பலனும் பெருகவில்லை என்ற உண்மையை யாவரும் ஒப்புக் கொள்ளவே வேண்டும். இந்தக் கூட்டணிகளுக்கு ஒரு முடிவு கட்ட அரசாங்கம் முன்வருமா?

காஞ்சீபுரம்—2, 6—3—70

லலிதா செல்லப்பா

---

குறிப்பு: கடிதத்துடன் கும்பகோணத்தில் வாங்கப்பட்ட ஸ்ரீ முத்துக்குமரன் கூட்டணி டிக்கட்டை ஸ்ரீமதி லலிதா செல்லப்பா அனுப்பியுள்ளார்.

- ஆசிரியர்.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

# பாருங்கள்...வித்தியாசத்தை!

# வெண்மை பளிச்சிடச் செய்வதில் இணையற்றது டினோபால்




விளைவுகளே கூறுகின்றன! துவைத்த துணிகளை அலசுவதற்குமுன் வாளியிலுள்ள தண்ணீரில் சிறிதளவு டினோபால் சேர்க்கவும். பிறகு பாருங்கள், சலவையின் வெண்மை எப்படிப் பளிச்சிடுகிறது என்று! சட்டை, புடவை, படுக்கை விரிப்பு, டவல் எல்லாமேதான்!

இத்தனைக்கும் ஆகும் செலவு, துணிக்கு ஒரு பைசாவுக்கும் குறைவு! டினோபால் வாங்குங்கள். ரெகுலர் பாக், எகானமி பாக் மற்றும் ஒரு வாளித் துணிக்கு ஒரு பாக்கெட் ஆகிய மூன்று அளவுகளில் கிடைக்கிறது.




®டினோபால் என்ற பெயர் ஜே.ஆர். கெய்கி எஸ்.ஏ. பாஸல், சுவிட்சர்லாந்து நிறுவனத்தாரின் ரிஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க் ஆகும்.

சுஹ்ரித் கெய்கி லிமிடெட், த.பெ. 11050, பம்பாய்-20 BR.

Shilpi SGT-1A/69 Tam

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

# INDIA PISTONS

# now offer a regular supply of pistons for

AMBASSADOR • FIAT • HERALD • LANDMASTER • DODGE
STANDARD 10 • VANGUARD • MORRIS 8 • MORRIS MINOR
AUSTIN 8 • AUSTIN 10 • AUSTIN A 40 • FORD ANGLIA/
POPULAR AND FORD PREFECT



**For less oil consumption, quieter engine**



India Pistons' modern RW design carries a special 'ring-below-pin' feature, available for almost all models; it ensures perfect oil control and guarantees smoother running of your car.

Next time, ask your mechanic to go for [illegible]—the best O. E. / Replacement pistons you can get in the market!



**INDIA PISTONS LIMITED** Madras-11

*A unit company of the Amalgamations Group*

*Distributors for Southern Zone:*

George Oakes Limited • Madras Auto Service (P) Limited • Speed-a-way (P) Limited